# வரலாற்றில் தமிழும் தமிழரும்

ஆய்வுக்கட்டுரைகள்

20358

சி. தர்மகுலசிங்கம்
B.A (வரலாறு) சிறப்பு




வெளியீடு:
கொண்கோப்
09, பெர்ணாண்டோ லேன்,
மட்டக்களப்பு.
தொலைபேசி: 065 - 25459

* வரலாற்றில் தமிழும், தமிழரும்
(ஆய்வுக்கட்டுரைகள்)

நூலாசிரியர்.
* திக்கவயல் சி. தர்மகுலசிங்கம்
B.A (வரலாறு) சிறப்பு

* முதற்பதிப்பு: ஓகஸ்ட் 1999
* வெளியீடு:
மட்டக்களப்பு மாவட்ட அரசசார்ப்பற்ற
நிறுவனங்களின் ஒன்றியம்
(கொண்கோப்)

* உரிமை : கொண்கோப்

* பிரதிகள் : 1000

* பக்கங்கள் : (60 + viii) = 68
* அச்சு:
ஈஸ்ரன் கிராபிக்ஸ் அச்சகம்
205/02 பார்வீதி,
மட்டக்களப்பு,
இலங்கை.
தொலைபேசி - 065 - 23055

* விலை 75 ரூபா



# என்னுரை

கடந்த 35 ஆண்டுகாலமாக என்னுள் இழைத்த வரலாற்றுத்தாகம் சுமார் நூற்றுஐம்பது வரலாற்றுக் கட்டுரைகளைப் பிரசவம் செய்துள்ளது. இக்கட்டுரைகள் பல்கலைக்கழக வட்டத்துள் மாத்திரம் உறங்கிக் கிடக்காமல் பொதுமக்களைச் சென்றடைய வேண்டும் என்பதற்காக பல்வேறு பத்திரிகைகள் மூலம் இவற்றை வாசகர்களிடையே பகிர்ந்து கொண்டேன். இக்கட்டுரைகளைப் பாராட்டி எனக்குக் கிடைத்த கடிதங்கள் என்னை அதிர்ச்சியடைய வைத்தன. இக்கட்டுரைகள் பல ஈழநாடு, வீரகேசரி, தினகரன், ஈழமுரசு ஆகிய பத்திரிகைகள் மூலம் வெளிவந்தன

இப்பத்திரிகைகள் மூலம் வெளிவந்த இக்கட்டுரைகள் பல என்னிடம் ஒப்புமை பெறாமலேயே சிங்கள, ஆங்கில மொழிபெயர்ப்புக்கள் பெற்று நாட்டில் உலாவுவதும் எனக்கு ஒரு வழியில் சந்தோசமாகத் தான் உள்ளது. (பலர் பின்பு என்னிடம் உண்மையைக் கூறினார்கள்)

சுவாமி விபுலானந்தர் ஒரு வரலாற்று நோக்கர். அவர் தான் எழுதிய யாழ்நூலில், 5000 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழர்களைச் செருப்புப் போட வைத்துள்ளார். பட்டு வேட்டி கட்டி பவனி வரச் செய்துள்ளார். ஐந்தாயிரம் ஆண்டுகட்கு முன்பு தமிழன் நாகரீகம் அடைந்திருந்தான் என்பதை நிறுவும் முயற்சியே அது. சுவாமி விபுலானந்தருக்கு இந்த ஆசை உண்டென்றால் எம் போன்றவர்கட்கும் இது இருத்தல் வியப்பு அல்ல.

கம்போடிய அரச அரண்மனையிலே, அரசசபை நிகழ்வுகளில் "ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதி" போற்றியெனத் தமிழில் வணங்குகிறார்கள். ஆனால் அம்மொழி தமிழ் என அவர்கட்குத் தெரியாது இவர்கள் முன்பு தமிழர்களாக இருந்தார்கள் என்பது வரலாற்று ஆய்வாளர்கட்கே புரிந்த விசயம். வரலாற்று ஆய்வாளரான யோன் கந்தர் (John Gunther) என்பவர் ஒவ்வொரு நாட்டு விடயங்களையும் வரலாற்றுடன் உடப்பக்க

அணுகுமுறையைக் கொண்டிருந்தார். அவர் எழுதிய "INSIDE ASIA, INSIDE EUROPE" போன்ற நூல்கள் வெறும் பிரயாணக் கட்டுரைகளாக மாத்திரமன்றி வரலாற்றுக் கருவூலமாகவும் விளங்குவது வெளிப்படை.

இலங்கையின் வரலாறும் உட்பக்க அணுகுமுறைகளைக் கொண்டதாக அவை இதுவரை இருக்கவில்லை. ஒன்றை மறைத்து இன்னொன்றாகச் செய்வதே இனவாத எழுத்தர்கள் தமிழ் வரலாற்றுக்குச் செய்த தொண்டாகும். கம்போடியா தொடங்கி இலங்கை வரை இலங்கையில் இருந்து எகிப்துவரை தமிழர் வரலாறு தொடர்பு கொண்டது. இதனை சுவாமி விபுலானந்தர் தனது நூலகளில் பல இடங்களில் இனம் காட்டியுள்ளார்.

இலக்கியத்திலும் வரலாற்றிலும் தமிழர் வரலாற்றியல் சம்பந்தமான சில தகவல்களைத் தருவதும் இது சம்பந்தமாக இனிவரும் ஆய்வாளர்களைத் தூண்டுவதுமே இந்நூலின் நோக்கமாகும்.

இந்நூல் வெளிவரக் காரணமாக இருப்பவர்கள் இருவர் அவர்கள் **'கொண்கோப்' செயலாளர் திரு. மார்ட்டினும் தினக்கதிர் பத்திரிகையின் பிரதம ஆசிரியர் திரு. வி. மைக்கல் கொலின் B.B.A** அவர்களுமே, இவர்கட்கு எனதுமனப்பூர்வமான நன்றிகள். வாசகர்கள் இன்நூலின் கருத்துக்களை சாமானிய மனிதர்களிடத்தில் முன்னெடுத்துச் சென்றில் அதுவே வெற்றியாகும்!

என்றென்றும் அன்புடன்
**திக்கவயல் சி. தர்மகுலசிங்கம்**
பி.ஏ வரலாறு (சிறப்பு)





# முகவுரை

இன்றைய தமிழ் எழுத்துலகில் புதிய பரிமாணங்களைச் சேர்க்கும் முகமாகப் பன்முகப்படைப்புக்களை அளித்து வரும் எழுத்தாளர்களில் 'திக்கவயல்' சி. தர்மகுலசிங்கம் அவர்கள் முக்கியமானவர். வரலாற்றுத்துறையின் சிறப்புப் பட்டதாரியான இவர் வடக்கிலும். கிழக்கிலும், தலைநகரிலும் இருந்து வரும் செய்திப் பத்திரிகைகளினூடாக வாசகர்கள் மனதில் நீங்கா இடம் பிடித்துள்ளார். கடந்த 35 வருடங்களாக வரலாற்றுத்துறை சம்பந்தப்பட்ட பல்வேறு கட்டுரைகளை ஈழநாடு, வீரகேசரி, தினகரன் ஆகிய பத்திரிகைகளின் ஊடாக தமிழ் வாசகர்களைச் சென்றடைய வைத்தவர்களில் இவரும் குறிப்பிடத்தக்கவர்.

இவரின் ஆராய்ச்சித்திறனில் உண்டான அபிமானம் காரணமாகப் பல பத்திரிகைகள் இவரின் கட்டுரைகள் பலவற்றை மொழிபெயர்ப்பு செய்து வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது

இன்றைய காலகட்டத்தில் ஈழத்தைப் பொறுத்தவரை தமிழர் களின் வாழ்வு சிதைக்கப்பட்டு அவர்களது வரலாறுகள் திட்டமிட்டு அழிக்கப்பட்டு வரும் சூழ்நிலையில் பழம் பெருமைகளை தேட வேண்டிய சூழ்நியில் இன்று ஈழத்தமிழர் உள்ளனர். தமது அரசியல் இலாபங்களுக்காக ஒரு இனத்தின் வரலாற்றையே குழிதோண்டிப் புதைக்கும் கைங்கரியத்திலேயே கால காலமாக சிங்கள பேரினவாத அரசு ஈடுபட்டுள்ளது.

"இலங்கை சிங்களவர்களின் தேசம், இங்கு வாழும் தமிழர்கள் வந்தேறு குடிகளே" என்ற பாணியில் அண்மைக் காலமாக பல அரசியல் வாதிகள் தொடக்கம், புத்த மதகுருமார் வரை புதிய கண்டுபிடிப்புக்களை வெளிக்கொணர்ந்துள்ளனர். தோண்டும் இடங்களில் எல்லாம் வெளிவரும் பௌத்த மத சின்னங்களும் அவை ஏற்கனவே புதைக்கப்பட்டிருப்பதும் திட்டமிட்ட ரீதியில் தமிழ் இனத்தின் இருப்பை மெல்ல மெல்ல விழுங்கும் சதியே ஆகும்.

எனவே இன்றைய நிலையில் ஈழத்தமிழர்கள் தமது வரலாற்றை தோண்டும் கட்டாய நிலைக்கு தள்ளப்பட்டுள் ளனர். இது இனவாத நோக்கமன்று. ஒரு இனத்தின், அதுவும் உலகிலேயே பழம் பெருமை களை அதிகம் கொண்டதும், நாகரீகத்தில் சிறப்பிடம் பெற்றதுமான தமிழ் இனத்தின் வரலாற்றை தக்க வைத்துக் கொள்ளும் முயற்சியாகும்.

பழம்பெரும் காப்பியங்களையும், காவியங்களையும் உலகிற்கு ஈந்த தமிழ் மொழியின் சிறப்பு - ஈழத்தைப் பொறுத்தவரை கேள்விக் குறியாகவே உள்ளது. இந்நிலையில் இவ்வாறான ஆராய்ச்சி நூல்களே அதன் தடத்தினை மீண்டும் மீண்டும் ஆழப்பதித்து செல்கின்றது. அந்த வகையில் இவ்வாறான ஆய்வுக் கட்டுரைகளின் தோற்றம் தமிழ் இனத்தின் வரலாற்றை குறிப்பாக ஈழத்தமிழர்க ளின் இன்றைய நிலையை உறுதிப்படுத்தும் முயற்சியாகும்.

திரு. திக்கவயல் தர்மகுலசிங்கம் அவர்கள் தனது நீண்டகால தேடலின் மூலம் பல கட்டுரைகளை அவ்வப்போது எழுதியுள்ளார். அதனை தொகுத்து இன்று ஒரு நூலாக வெளியிடுகிறார்.

'மாதோட்டம்' தொடங்கி 'திருகோணமலை' வரை அன் றைய ஈழத்தில் தமிழராட்சி நிலவியதையும், தமிழ் மன்னர்கள் தமது வெற்றிக் கொடி நாட்டியதையும், வரலாற்று ஆதாரங் களுடன் நிருபித்துள்ளார். அதுமட்டுமன்றி இன்று பௌத்த சிங்களவர்கள் என்றும், பௌத்ததேசம் என்றும் பேசப்படும் இலங்கையில் பௌத்த மதத்தை வளர்த்ததிலும் தமிழர்களே முன்னின்றுள்ளனர் என்பதையும், சிங்களவர்கள் சொல்வது போல் பௌத்தம் அவர்களுக்குரிய மதம் மட்டுமல்ல அது பொதுமையானது தமிழர்களிலும் பௌத்தர்கள் இருந்துள் ளனர் என்பதை வரலாற்று ஆதாரங்களுடன் நிருபித்துள்ளார்.

பெருந்தேவனார் தொடக்கம் கவிராசரார், காசபதேரர், சீத்த லைச்சாத்தனார், சங்கமித்திரர், மணிமேகலை, தர்ம கீர்த்தி, சத்தம், மஜோதிபாலர், பொட்டிட்டபுத்தர் வரை புத்த



மதம் வளர்த்தவர்கள் தமிழ் துறவிகளே. எனவே இங்கு நாம் காணும் உண்மை சிங்களத் திற்கும் புத்தத்திற்கும் உள்ள தொடர்பினை விட முந்தியதும் அதிக இறுக்கமானது புத்ததிற்கும் தமிழிற்கும் இடையே உள்ள தொடர்பாகும். இதனையே மயிலைசீனி வேங்கடசாமி போன்ற சமய வர லாற்று ஆய்வாளர்களும் நிருபித்துள்ளனர்.

தமிழர்களின் வரலாற்றினை ஆய்வு செய்யும் இந்நூலில் சமகால பார்வையாக பாலஸ்தீனியர்ளையும் ஈழத்தமிழர்க ளையும் ஒப்பிட்டுள்ள கட்டுரையில் இன்றைய ஈழத்தமிழர் நிலை சிங்கள பேரினவாத அரசின் குடியேற்றத் திட்டத்தினால் எவ்வாறு தனது இருப்பினை இழந்து வருகின்றது என்பதை தெளிவாக குறிப்பிடுகிறது.

இன்றைய சமகாலத்தில் தனது இனத்தின் இருப்பினை தக்க வைத்துக் கொள்ளும் முயற்சியில் போராடிவரும் மக்களில் ஈழத் தமிழர்களும் அடங்குகின்றனர்.

தனது நீண்டகால போராட்டத்தின் மூலமே தென்னா பிரிக்க மக்கள் இன்று சுதந்திரக் காற்றைச் சுவாசிக்கின்றனர். அதேபோன்ற தொரு போராட்டத்தின் மூலமே ஓரளவிற்கேனும் தமது சொந்த தேசத்தில் வாழும் உரிமையை இன்று பாலஸ் தீனியர்கள் பெற்று வருகின்றனர்.

தென்னாபிரிக்க மக்கள் தமது மண்ணை இழந்து உரிமையை இழந்து, வெள்ளையர் ஆட்சியில் தமது சுயம் தேடும் முயற்சியில் இறங்கியிருந்த வேளை அங்கு பாடப்பட்ட ஒரு கவிதையே என் ஞாபகத்திற்கு வருகின்றது.

**அன்று -**
**அவர்கள் வரும் போது**
**அவர்கள் கரங்களில் பைபிளும்**
**எங்கள் கரங்களில் நிலமும் இருந்தது**
**இன்று -**
**அவர்கள் கரங்களில் எங்கள் நிலமும்**
**எங்கள் கரங்களில் அவர்கள் பைபிளும்**
**இருக்கிறது.**

இந்த கவிதை நாட்டார் பாடலாக அங்கு பாடப்பட்டு வந்தாலும் கவிதையாகவும் எழுத்துருவில் பலரை சிந்திக்க வைத்தது. ஒரு இனத்தின் மீதான சோகமயமான சூறையா டலை மிக மென்மையாக அதேவேளை இடியாக இறக்கியது உண்மை.

இதேபோன்றதொரு நிலை ஈழத்தமிழர்களுக்கும் ஏற்பட் டது. காக்க வந்தவர்களே தாக்கியபோது தமிழ்மக்கள் திகைத் தனர். ஆம் 'இலங்கை - இந்திய ஒப்பந்தத்தின்' மூலம் எமக்கு விடிவு காலம் வந்துவிட்டது என்ற மாயையில் கிறங்கி இருந்த தமிழ்மக்கள், காக்க வந்தவர்களே தமக்கு எமனாக மாறிய போது, இலங்கை தமிழர்களின் உரிமைப் போராட்டம் புது வடிவமெடுத்த காலகட்டம் இலங்கையிலும் பல கவிதை கள் பிறந்தன. தமது மண்ணை தமது உரிமையை அந்நிய சக்தியிடம் இருந்து காக்க வேண்டிய தேவை ஏற்பட்ட வேளை இலக்கியம் போராட்ட வடிவங்களில் ஒன்றாக மாறியது. கவிதை ஆயுதமாகியது

**ஆட்டாமா ரொட்டியும்**
**ஆட்டிறைச்சிக் கறியும்**
**எம்மை ஆட்டிப் படைக்கிறது**
**அழித்து வருகிறது**
**அப்பாவிகளாக**
**வந்தவர்கள்**
**இன்று அப்பாக்களாக**
**போகிறார்கள.....**

என்று கவிதை வெளிக்கிளம்பியது.

தமிழ்ப் பெண்கள் தாம் கட்டிய கணவர் முன்னிலையில் தாய் தன் பிள்ளைகள் முன்னிலையில் துகிலுரியபட்டவேளை இங்கும் புதிய சிந்தனை பிறப்பெடுத்தது. தமது மண்ணின் உரிமைக் காக. தமது மொழிக்காக தாமே போராடவேண்டும் என்ற படிப்பினை வலுப்பெற்றது உண்மை. இது போன்றே பல கட்டுரைகளும் படைக்கப்பட்டன.



இத்தகைய காலகட்டங்களில் தான் இவ்வாறான நூல்க ளின் தேவை உணரப்பட்டது. "ஆண்ட பரம்பரை மீண்டும் ஒரு முறை ஆள நினைப்பது என்ன தவறு?" என்ற வகையான அரசியல் இலாபம் தேடும் உணர்ச்சிகரமான வார்த்தையாடல் களுக்கு அப்பால் உண்மை நிலைமை உணர்த்த தலைப்பட்ட தமிழர்கள் தமது வாழ்வுரிமை பற்றி சிந்திக்க வேண்டிய காலகட்டத்தில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

தூங்கி எழும் ஒவ்வொருநாள் பொழுதிலும் ஓர் அங்குல நிலம் வீதம் தமது பிரதேசத்தை இழந்து வரும் நிலையில் இன்று ஈழத்தமிழர் நிலையுள்ளது.

'கடாரம் வென்று கப்பல் விட்டகதைகள்' போய் இன்று அந்நிய தேசங்களுக்கு வர்த்தகத்திற்காய் அல்ல அகதியாய் ஏற்றுமதி செய்யப்படும் நிலையில் ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டிய கட்டாய சூழ்நிலைக்கு தள்ளப்பட்டுள்ள நிலையில் தான் இவ்வாறான ஆய்வு நூல்களின் வருகை எமக்கு ஆதரவு தருகிறது.பலம் சேர்க்கிறது.

மீண்டும் எம் இனத்தின் வரலாற்றை திரும்பிப் பார்க்க வைக்கி றது. அந்தவகையில் தமிழர் சரித்திரம் சொல்லும் இந்நூல் பாடப்புத் தகமாக்கப்பட்ட வேண்டும். வெறுமனே தமிழரின் சரித்திரத்தினை மட்டுமன்றி தமிழின் தொன்மைக்கும் அதன் சிறப்பிற்கும், பங்காற்றிய அறிஞர்கள் பற்றிய அறிமுகக் கட்டுரைகளும் இந்நூலில் உள்ள கட்டுரைகளில் தரப்பட் டுள்ளது மேலும் சிறப்பாகும்.

காலத்தால் அழியாத தமிழர்களின் வரலாற்றை பதிவு செய்யும் முயற்சியில் தனது தேடலை தொடங்கும் இந்நூல் தமிழ்பேசும் உலகால் போற்றப்படும் என்பதில் ஐயமில்லை.

அன்பகலா பிரியங்களுடன்
**வி. மைக்கல் கொலின் B.B.A**
(பிரதம ஆசிரியர் - தினக்கதிர்
வாரவெளியீடு)

**10. 07. 1999**

# சமர்ப்பணம்

என்

தாய்க்கும்

தந்தைக்கும்



"திக்கவயல்"



பொருளடக்கம் பக்கம்

இலங்கையில் ஊரும் பேரும்!

# ① சிதைக்கப்படும் வரலாறுகள்! மொழித்திரிபு வாதங்கள்!!

இலங்கையில் இன்று பெரும்பான்மையாக வாழும் மக்கள் சிங்கள மக்களே. பெரும்பான்மை மொழியும் சிங்கள மொழியே. ஆயினும் இன்று "லங்கா" என்று அழைக்கப்படும் இச்சொல் சிங்கள மொழிக்கே தனிய உரியசொல் அல்ல! ஈழம் தாமிரபரணி, இலங்கை,இரத்தினதுவீபம், நித்தில துவீபம் போன்ற பல, தமிழ்ச் சொற்கள் இந்த நாட்டை அழைப்பதற்காக ஏற்படுத்தப்பட்டன. ஈழத்துப் பூதந்தேவன் என ஒரு புலவன் சங்க காலத்தில் குறிப்பிடப்படுகின்றார்.

"ஈழத்து உணவும் காளகத்து ஆக்கமும்" என்ற அடிகள் பட்டினப் பாலையில் வருகின்றது. ஈழத்தில் இருந்து உணவுப் பண்டங்கள் தமிழ் நாட்டுப் பட்டினங்களுக்கு வந்த செய்தியை இப்பாடல் விளம்புகின்றது.

இலங்கை வரலாற்றில் 2ஆம் நூற்றாண்டில் இலங்கை "தாமிரபரணி" என்ற சொல்லால் வழங்கப்பட்டது. தென்னாட்டில் இருக்கும் பல இடப் பெயர்கள் இலங்கைத் தமிழ் மக்கள் வாழும் இடங்களுக்குப் பொது வானவை. உதாரணமாக திருநெல்வேலி, இராமநாதபுரம் நாகர் கோவில் போன்ற இடங்கள் தென்னாட்டில் உள்ளன. அதே பெயரில் வட இலங்கையில் ஊர்கள் உண்டு. அதே போன்று ஆதியில் இந்தியாவில் இருந்து இடம் பெயர்ந்த மக்கள் தென்னாட்டில் உள்ள ஓர் ஆறின் பெயரை இந்நாட்டுக்குச் சூட்டினார்கள். தாமிரம் என்பது செம்பைக் குறிக்கும் சொல். பரணி என்பது பூமி என்ற கருத்தில் எடுத்தாளப்பட்டது, இலங்கைத் தீவு செம்பு நிறத்தில் அமைந்த பூமி என்பது இதன் அர்த்தம்.

கிரேக்கர்கள் இலங்கையை 2ம் நூற்றாண்டில் "தப்ரபேன்" என அழைத்தனர். தூத்துக்குடி ஆங்கிலத்தில் "தூத்ரிக்கோன்" ஆனது போல கிரேக்கர்கள் வாயில் தாமிரபரணி தப்ரபேன் ஆனது. எட்டோஸ்தெனிஸ் என்ற கிரேக்கர்கள் இலங்கையைப் பற்றி எழுதுகையில் இந்தியாவின் தென் பகுதிக்குத் தொலைவில் உள்ள தீவு எனச் சுட்டிக் காட்டியுள்ளார். "மெகஸ்தனிஸ்" என்ற பழங்கால ஆய்வாளர் "தபிரபேன்" என்ற நாட்டையும் இந்தியாவையும் ஓர் ஆறு பிரிப்பதாகவும் அந்த நாட்டில் வாழ்வோர்

"பாலோகோனாய்" என அழைக்கப்பட்டதாகவும் கூறுகின்றார்.

'பெரிப்பிளிஸ்' என்ற அறிஞர் தனது காலத்தில் இலங்கை சாலிக் என அழைக்கப்பட்டதாகவும் அங்கு சாலைகள் நிறைந்திருந்தாகவும் கூறுகின்றார் இச்சொல்லாட்சி தமிழ் மக்களின் இலங்கை ஆதிக்குடியிருப்புக்களை நினைவுபடுத்துகின்றது. கி.பி 515 ஆம் ஆண்டில் தான் தாமிரபரணிக்கு விஜயம் செய்ததாக 'சோபரட்டஸ்' எழுதியுள்ளார். அசோகரின் கல்வெட்டு ஒன்றில் அவர் தான் கைப்பற்றிய நாடுகளின் பிரதிநிதிகளைக் கொண்ட கூட்டம் ஒன்றைக் கூட்டியதாகவும் அதில் சோழர், பாண்டியர், சத்திய புத்திரர், கேரளபுத்திரர், தாமிரபரணியர் இடம் பெற்று இருந்ததாகவும் கூறுகின்றார். மகாவம்சம் இலங்கையில் விஜயனும் அவரின் நண்பர்களும் கி.பி 7ம் நூற்றாண்டில் தம்பபண்ணையில் இறங்கியதாகக் கூறுகின்றது. இலங்கையில் விஜயன் வந்திறங்கிய 7ம் நூற்றாண்டின் பின்பே சிங்களவர் வரலாறு இலங்கையில் கூறப்படுகின்றது. ஆனால் தாமிரபரணி என்ற சொல் இலங்கையில் தமிழ் மக்கள் இரண்டாம் நூற்றாண்டிலேயே வாழ்ந்தார்கள் என்ற உண்மையை எடுத்துச் சொல்கின்றது.

## லங்கா என்ற சொல்

"லங்கா"என்ற சொல் சிங்களச் சொல் அல்ல. மகாபாரதமும். வால்மீகி ராமாயணமும் லங்கா என்ற சொல்லை எடுத்து ஆண்டு உள்ளன. இலங்கை என்பதன் திரிபே லங்கா எனச் சொல்வாரும் உள்ளனர். ஸ்ரீ என்பதும் திரு என்பதும் அழகை உணர்த்தும் அடைமொழிச் சொற்கள். திருக்கோணேஸ்வரம், திருச்சிராப்பள்ளி, திருக்காளத்தி, திருச்செங்கோடு என்பனவற்றால் இதனை அறியலாம். ஸ்ரீ என்பதும் இவ்வாறானதே தமிழிலும் சிங்களத்திலும் இவை பொதுவானவை. ஸ்ரீராகுல, ஸ்ரீவர்த்தனா, ஸ்ரீபாத, ஸ்ரீ கீர்த்திசிங்க விமலசூரிய என்ற பெயர்களும் ஸ்ரீதரன், ஸ்ரீகாந்தா, ஸ்ரீமுருகன் என்ற பெயர்களும் இதனை இனம் காட்டத்தக்கன. இன்று இதில் எது சரி எனவாதப் பிரதிவாதங்கள் நடாத்துபவர்கள் எதற்காகச் சச்சரவுப்படுகின்றார்கள எனத் தெரியவில்லை.

இந்தியத் தொல்பொருளியல் டைரக்டரால் பண்டைய இலங்கை "தாமிரபரணி" என வெளியிடப்பட்ட படத்தில் இலங்கை "தாமிரபரணி" என்றே குறிப்பிடப்பட்டது.இலங்கை என்ற சொல்லாட்சியைக் கம்பர் பயன்படுத்தி உள்ளார். ராமனுடன் நடைபெற்ற யுத்தத்தில் தோற்றுவிட்ட இராவணன் "வெறுங்கையுடன் இலங்கை புக்கான்" எனக் கம்பர் பாடியுள்ளார். இக்காரணங்களால் இலங்கையைக் குறிக்கும் சொற்கள் யாவும் தமிழ் மொழியிலேயே இருந்தன என்பது புலனாகும்.



## பெயர் மாறும் வரலாறு

இலங்கையில் பெயர் மாறும் வரலாறு சிங்கள வரலாற்று ஏடுகளில் (மகாவம்சம், தீபவம்சம்) முக்கியமானவை. இந்த இரண்டு நூல்களிலும் பல தமிழ்ச்சொற்கள் உண்டு. அந்த நூல்களில் இலங்கையின் ஆறுகள் பற்றிய பெயர்கள் பலவும் தமிழ்ச் சொற்களே! அவற்றினை இப்போது பார்ப்போம்.

கடம்பநதி என ஒரு நதி மகாவம்சத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. (பக்கம் 66) அது ஒரு தமிழ்ச் சொல். அது இப்போது மல்வத்து ஓயாவாகப் பெயர் மாறியுள்ளது. கிருந்தி நதி மகாவம்சத்தில் கூறப்பட்டுள்ளது. அந்த நதி இப்போது கலுஓயாவாக மாறிவிட்டது. தீபவம்சத்திலும் மகா வம்சத்திலும் திகவாபி குறிப்பிடப்பட்டுள்ளது. இலங்கையின் முக்கிய நதிகளில் ஒன்று பட்டிப்பளை ஆறு. அது கல்ஓயா என மாறிவிட்டது.பதவிக்குளம் பதவியா ஆயிற்று

சமீபகாலத்தில் தமிழிலிருந்து சிங்களத்துக்கு மாற்றப்பட்ட பின்வரும் சொற்களும் ஒரு மொழித் திரிபு வாதத்தின் கால கட்டத்தை எடுத்துக் காட்டுகின்றது.

**உதாரணங்கள்**

01. அம்பாறை - திகாமடுல்ல (அழகிய பாறை)
02. கதிரேசன் கோவில் தெரு - கதிரேசன் கோவில வீதிய
03. தம்பலகாமம் - தம்பலகம
04. கலிவாபி - கலு ஓயா
    (கல்பிட்டியில் உள்ளது)
05. மண்ணிக்ரை (மாவம்சம் பக் 324 தற்போதைய பெயர் மின்னேரியா)
06. கதிர்காமம் - கதிரகம

## தமிழ் வரலாற்றுச் சிதைவுகள்

இலங்கையின் வரலாற்றில் தமிழ் மன்னர்களின் இடம்

மறைக்கக்கூடிய ஒன்ற அல்ல. இராவணன் எல்லாளன், சங்கிலியன். ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் என்ற பெயர்கள் இலங்கை, அனுராதபுரம், யாழ்ப் பாணம், கண்டி என்ற இனப்பாகுபாடற்ற ஓர் இலங்கையில் தமிழர்கள் ஆட்சி செய்ததை வலியுறுத்தி நிற்கின்றது. அனுராதபுரத்தில் எல்லாள னுக்கும் - துட்டகைமுனுவுக்கும் இடையில் நடைபெற்ற சண்டையில் எல்லாளன். தோல்வியடைந்தான். எதிரியாயினும் வீரன் எல்லாளனை மதிக்கும் முகமாக அங்கு ஒரு சமாதி கட்டப்பட்டது. அந்த இடம் இரண்டாவது நூற்றாண்டிலிருந்து 1948ஆம் ஆண்டு வரை எல்லாளன் சேனை என்றே அழைக்கப்பட்டது. சிங்களத்தில் “எலகரா கோட்டே” எனப்பட்டது. அரச பதிவகங்கள் யாவும் இப்பெயரையே பதிவு செய்தன. டாக்டர் பரணவிதான இலங்கைத் தொல்பொருளியல் ஆணையாளராக வந்த பின்பு இவ்விடத்தில் ஓர் ஆய்வு செய்யப்பட்டது. அதன் பின்பு பரணவிதான தனது ஆய்வில் பின்வருமாறு கூறுகின்றார்

“இச்சாமாதியின் கீழே ஆய்வு நடத்திய பின்பு இந்த இடத்தில் எலகரா என்ற மன்னன் ஆட்சி நடத்தியதும் இங்கு ஒரு புத்த விகாரை இருந்ததும் தெரிகின்றது”. இதன் பின்பு எல்லாளன் சேனை பரணவிதான ஆய்வின் பின்பு “தக்கிண தூபவாக” மாற்றம் அடைந்தது. பரண விதானவின் தவறுகளை எவரும் தட்டிக் கேட்க முடியாத அளவில் அவர் வரலாற்று அறிஞராகக் கொள்ளப்பட்டதே இத்தவறுக்கான காரணம். இவ்விடம் பற்றிய மகாவம்சத்தின் வரலாற்றைக் கூடப் பரணவிதானா மதிக்கவில்லை. மாகாவம்சம் பின்வருமாறு அவ்விடத்தைப் பற்றிக் கூறியுள்ளது.
( அத்தியாயம் 73.74)

“இந்த இடத்தில் தான் எல்லாள மகாராஜனின் பூதவுடல் வீழ்ந்து கிடந்தது. அந்த இடத்தில் ஞாபகச் சின்னம் ஒன்று எழுதப்பட்டது அன்று தொடக்கம் இன்று வரை அவ்விடத்திற்குச் செல்லும் அரசர்கள் தமது இசை வாத்தியங்களைக் கைவிட்டு, வணங்குவார்கள்”

## பரணவிதானவும் தமிழ்ச் சொற்களும்

திருகோணமலை என்ற சொல்லில் “கோன” இருக்கிறது. அது ஒரு சிங்களச் சொல். அங்கு சிங்களவர்கள் அதிகளவில் இருந்ததாகக் குறிப்பிடுகின்றார் பரணவிதான. இலங்கையின் வரலாற்றில் தொல் பொருளியல் ஆணையாளராகத் தமிழ். தெரியாத சிலர் இருந்துள்ளனர்.



அவர்களில் பரண விதானவும் ஒருவர். கோன் என்பது சிங்களத்தில் எருதைக் குறிக்கும். இச்சொல்லாட்சி மொட்டத் தலைக்கும் முழங்கா லுக்கும் முடிச்சுப்போடும் ஒரு நடவடிக்கையே! பரணவிதான தமிழ் படித்திருந்தால் இலங்கை ஈஸ்வரங்களின் வரலாற்றை தமிழ் இலக்கியம் மூலமாக அறிந்திருக்கலாம். அவ்வாறு அவருக்கு அது தெரிந்திரா விட்டாலும் ஆங்கிலம் மூலமாக அவருக்கு அந்த உண்மை புரிந்திருக்கும்.

இலங்கையில் விஜயன் வருவதற்கு முன்பே இலங்கையில் ஐந்து ஈஸ்வரங்கள் இருந்திருக்கின்றன. அவை திருக்கேதீஸ்வரம், (மன்னார்) முன்னேஸ்வரம், (சிலாபத்துறை) தான்தோன்றீஸ்வரம் (மாந்தோட்டை) திருக்கோணேஸ்வரம் ( கொட்டியாக்குடா) நகுலேஸ்வரம (காங்கேசன் துறை) இந்து ஆலயங்களைப் பற்றி மகாவம்சத்தின் கடைசி அத்தியா யங்களில் அதன் ஆசிரியர் மகாநாம குறிப்பிட்டுள்ளார். இவற்றைவிட 4ஆம் நூற் றாண்டின் பிற்பகுதியில் இலங்கைக்கு வந்த ‘பாமின்’ என்ற சீன யாத்திரிகர் இங்கு இந்து ஆலயங்கள் இருந்ததாகக் குறிப்பிட்டுள்ளார்.

திருக்கோணேஸ்வரம் கோகண்ண விகாரையாக இருந்ததாகவும் பரணவிதான பல இடங்களில் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால் கோணேஸ்வரம் கிறிஸ்துவுக்கு முன்பு வாழ்ந்த தமிழ் மக்களால் கட்டப்பட்டதாக மகாவம்ச நூல் கூறுகின்றது.

இவ்வாறு தமிழ்ச் சொற்களும் வரலாறும் சிதைக்கப்பட்டு வருகின்றது. திருக்கோணேஸ்வரம் என்ற சொல்லின் அர்த்தம் பின்வருமாறு அமையும். திரு - அழகை உணர்த்தும் அடைமொழி. கோன் - அரசன் (இங்கு இராவணன் என்ற அரசனைக் குறித்தது)

ஈஸ்வரர் - சிவன்
மலை - குன்றிருக்கும் இடம். 1963 ஆம் ஆண்டின் பிரிட்டிஸ் என்சக்கிளேப்பீடியா திருகோணமலையைப் பற்றிப் பின்வருமாறு கூறியுள்ளது..
“திருகோணமலை மாவட்டம் 1,165 சதுரமைலைக் கொண்டது.. முக்கியமாகத் தமிழ் மக்களும் முஸ்லிம்களுமே அங்கு வாழ்கிறார்கள். மொத்தக் குடித்தொகை 137,878”

## புலிகள் பற்றி பரணவிதான

தமிழ் நாட்டில் ஏற்பட்ட ஊர்ப்பெயர் களுக்கு காரணம் காட்டுவ தற்கான வரலாற்று நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் "சோமலே" என்பவர் மிகவும் முக்கியமானவர். ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் கூட தனது இலக்கிய நூல்களில் தமிழ்நாட்டின் ஊர்களும் பெயர்களும் எவ்வாறு வந்தன. என்பதை ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளார். இவ்வரலாறுகள் ஒரு இனத்தின் வரலாறு சிதைவடைவதைத் தவிர்க்கும்.

பரணவிதானயின் கட்டுரை ஒன்றைப் படித்த போது இவ்வாறான எண்ணமே ஏற்பட்டது.பரணவிதான கூறுகின்றார்.

புவியியலின்படி ஸ்ரீலங்கா டெக்கான் தீபகற்பத்தின் ஒரு பகுதியாகும். புவியியல் அதிர்வினால் இலங்கை பிரிந்த போது இங்கிருந்த புலிகள் யாவும் இந்தியாவின் தென்பகுதி நோக்கி நகர்ந்தன. இக்காரணத்தினால் இலங்கையில் புலிகள் இல்லை (ஆதாரம்) (நிக்கலசும், பரணவிதானாவும் எழுதிய நூலில் இருந்து).

இலங்கையில் உள்ள காடுகளில் புலிகள் இல்லை என்று கூறுவது மடமை, பெரிய புலிகள் இல்லையென்றாலும் சிறுத்தைப் புலிகள் இருக்கின்றன. இக்கட்டுரை ஆசிரியர் வேட்டைக்காரர்களால் சுட்டுக் கொல்லப்பட்ட சில புலிகளை விசுவமடு, முத்தையன்கட்டுப் பகுதிகளில் கண்டுள்ளார்.

இலங்கையின் தமிழின் தொன்மையையும், தமிழ்ப் பெயர்களில் புதைந்து கிடக்கும் வரலாற்று உண்மைகளும், வரலாறு சிதைக்கப்பட முன்பு எழுதி வைக்கப்பட வேண்டும்.





# (2) தமிழ் மக்களின் தொன்மைக்குச் சான்று தரும் திருகோணமலைத் தொன்மங்கள்

தஷிணகைலாய மான்மியம் என்ற வடமொழி நூல் திருகோண மலையைப் பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளது. "தஷிணகைலாய மான் மியம் கந்தபுராணத்தில் ஒரு பாகமாகக் கருதப்படும் வடமொழி நூலாகும். "சங்கர சிவனாய், விந்துநாத வடிவினராய், தாரகப் பிரமமாய், நித்தியராய், கோணேசப் பெருமான் தஷிண கைலாச கிரியில் அம்பிகையாரோடு எழுந்தருளியிருப்பவர். சிதம்பரத்திலுள்ள பொற்சபையும் மதுரையிலுள்ள வெள்ளிச் சபையும், திருநெல்வேலியிலுள்ள தாமிரசபையும் இத் தஷிண கைலாயத்திலுள்ள சூடாமணி சபையும், ஆகிய இவ்வைந்தையும் தன் சென்ம மத்தியில் தரிசிக்கும் எவர்க்கும் சகல பாவங்களும் நின்று நீங் கிச் சீவன் முத்தராவார். மகாவலிகங்கை, காவேரி கங்கை, மாணிக்க கங்கை, கன்னியா கங்கை, பாவநாச தீர்த்தம் என்றும் சுபகரமாகிய ஐந்து தீர்த்தங்களையும் தினமும் நினைப்பவன் தனது கோடி குலங்களை மேம்படுத்துவான்."

## குளக்கோட்டன்

குளக்கோட்டன் என்ற மன்னனின் பெயர் திருகோணமலைச் சரித்திரத்தில் நீங்கா இடம் பெற்றது. இம்மன்னனின் பூர்வீகம் பற்றிப் பல்வேறு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. ஆயினும் இம் மன்னன் மனுநீதி கண்ட சோழனின் மகனாக இருக்கலாம் என்றே கூறப்படுகின்றது. தஷிண கைலாய புராணம் இவனது தந்தையின் பட்டப்பெயர் (வராமதேவன்) இலங்கை வந்து கோணேஸ்வரக் கோயிலைத் திருத்தியமைத்து அமரனான பின்பு அந்த இடத்தைக் குளக்கோட்டன் நிறைவு செய்தான். குளமும், கோட்டமும் நிறைவேறியதால் இவன் பெயர் குளக்கோட்டனாக ஆகி இருக்கலாம். இவனுடைய காலம், தொண்டு என்பன பற்றி கோணேசர் கல்வெட்டுப் பாடல் ஆதாரத்தைச் சமர்ப்பித்துள்ளது அப்பாடல் வருமாறு.

**திருந்து கலி பிறந்தைஞ்நூற்றிருபதுடன் இரண்டாண்டு சென்ற பின்னாப்**
**புரிந்திட மாதமதில் கரைந்தாந் தேதி திங்கள்**
**புணர்ந்த நாளில்**

**தெரிந்த புகழ் ஆலயமாஞ் சினகரமும் கோபுரமும்
தேரூர் வீதி
பரிந்துரத்ன மணிமதிலும் பாபநாசகச் சுனையும்
புகுத்தான் மேலோன்''**

## சைவமும் கோனேஸ்வரமும் காத்த கயவாகுமன்னன்

"கடல் சூழ் இலங்கைக் கயவாகு வேந்தன்'' எனச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகின்றது. சிலப்பதிகார காலத்திலே இலங்கையில் கயவாகு எனப் பெயரிய மன்னன் ஒருவன் இருக்கவில்லை. என ஆராய்ச்சி அறிஞரான ரகுநாதன் தாம் எழுதிய சிலப்பதிகார ஆராய்ச்சி என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். ஆயினும் கோணேஸ்வரக் கல்வெட்டு கயவாகு என்ற ஒரு மன்னனைக் குறிப்பிட்டுச் செல்கின்றது. கோணேஸ்வரர் சேமநிதிக்குப் பொன்னும் ஆபரணமும் அளித்ததாகக் கருவூலக் கணக்கில் பெயர் பதியப்பட்டவர்களில் மூன்றாவதாக இடம் பெறுபவன் கயவாகு மன்னனே.

இவன் அரசாண்ட காலம் கி. பி. 113 - 125 என வரலாறு கூறுகின்றது இம்மன்னனைப் பற்றிய சுவாரசியமான சம்பவம் ஒன்றினை வரலாறு கர்ண பரம்பரைக் கதையாகக் கூறி வருகின்றது.

## கண்தளை குளம் கந்தளாய்க் குளமானது

இந்த மன்னன் கோணைநாதர் மூலஸ்தானத்தை இடித்து அங்கு ஒரு புத்தவிகாரை கட்ட எண்ணம் கொண்டான். தனது சேனையுடன் குளக்கோட்டனால் கட்டப் பெற்ற பெரும் குளமருகே படை நடாத்திக் கொண்டிருக்கையில் கோணை நாதர் அவனின் கண் ஒளியை மங்கச் செய்தார் என்றும் அப்பால் செல்வதற்கு இயலாத கயவாகு வேந்தனுக்கு கோணைநாதர் திருநீறு கொடுத்துக் கண் வழங்கச் செய்தார் என்றும் சொல்லப்பட்டது. அரசனுக்குக் கண் தளைத்த குளமாதலின் "கண்தழை'' குளமானது. பின்பு அதுவே கந்தளாய்க் குளமாக மருவியது என்பர்.

அரசன் கோணேஸ்வரத்தை அடையமுன்பே புத்தபிக்குகள் கோணேஸ்வரர் கோயிலை அடைந்து கலகத்தில் ஈடுபட்டனர். அவ்வாறு கோணேஸ்வரத்தையடைந்த புத்த பிக்குகள் அங்கு பூசகராக இருந்த குருக்கள்மாரையும் கடலில் வீழ்த்தி விட்டனர். இதனை அறிந்த கயவாகு மன்னன் அங்கு மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். பின்பு தன் நிலை அடைந்தான். இந்தநிலையில் கடலில் வீழ்ந்த பாசுபத வேதியர்கள் இருவரும் கடலில் உயிருக்காகப் போராடுவதை அறிந்து கடற்கரைக்கு ஏகினான். இதற்கு ஆதாரம் என்ன என வினா எழுதல் இயல்பே. இதற்கு ஆதாரமாகக் கோணேஸ்வரக் கல்வெட்டு பின்வரும் பாடலை.ஆதாரமாக சமர்ப்பித்துள்ளது.

**"கடன்மிசை மறையோர் கமண்டலம் புத்தகந்
திடமொடு கொண்டிவன் சேர்கின்றாரென
அடலுடை அரசனும் அகமிக மகிழ்ந்து
திடமுடன் அரன் திருச்சேவடி வணங்கி
மன்னனும் அந்த மலைக்கீழ் இறங்கி
முன்வந்தவற்கு முதன்மை கை கொடுத்து
பின் வந்தவற்குப் பின் கை கொடுத்து
அன்னர் இருவரையும் முன்னே விட்டு
அரசனும் பிறகே அன்போடு வந்து
உரக ஆபரணன் ஒளி திகழ்பூசை
திரமொடு செய்கெனச் சீருடன் உரைத்த**

கோணேசர் கல்வெட்டிலிருந்து

இவ்வாறு கடலில் இருந்து தப்பிப் பிழைத்த பாசுபதர்கள். அவர்களின் பின்னோர்கள் முற்பாகையாளர், பிற்பாகையாளர் எனப் பெயர் பூண்டு பிற்காலத்தில் கோணேஸ்வர ஆலயத்தின் பூசகர்களாக இருந்தார்கள். இந்த இரு பகுதியினருக்கும் முதன்மைப் பூசகராக இருந்தவர் "இருபாகை முதன்மை'' என வரலாறு குறிப்பிட்டுள்ளது.

## சம்பந்தர் பாடிய திருத்தலம்

கோணேஸ்வரப் பெருமானைப் பற்றி அதிகமான பாடல்களைப் புனைந்து சமய வரலாற்று ஆதாரங்களைத் தந்திருப்பவர் சம்பந்தமூர்த்தி நாயனாரே. சம்பந்தருக்கு முன்பு இக்கோயிலிற்கு கருவூலக்கணக்கில் உதவிய மன்னர்களாக புவனேக கயவாகு, மனுநேய கயவாகு ஆகியோர் சுட்டிக் காட்டப்பெறினும் இவர்கள் யார் என்பது பற்றிச் சரியாகத் தெளிவில்லை. அதன் பின்பு சம்பந்தர் பாடல்களே கோணேஸ்வரத்துக்குப்

புத்துயிருட்டின. கோணேஸ்வரா கோயிலுக்கு அருகில் குடிகள் நெருக்க மாக வாழ்ந்தனா் இதனைத் திருஞானசம்பந்தா்

**"குடிதனை நெருங்கிப் பெருக்கமாய் தோன்றுங்**
**கோணமாமலையமர்ந்தாரே"**

என்றும் நந்தவனச் சோலைகளும் இளமரக்காக்களும் அமைந்திருப்பதை

**"விரிந்துயர் மௌவல் மாதவி புன்னை**
**வேங்கை வண்செருத்தி செண்பகத்தின்**
**குருத்தொடு முல்லை கொடிவிடும் பொழில் சூழ்**
**கோணமாமலை யமர்ந்தாரே"**

என்றும் பாடியுள்ளாா்

## கயல் இலச்சனை பொறித்த மன்னன்

கி.பி 1251- 1262 வரை திராவிடத்தில் சக்கராதிபத்தியம் செலுத்தியவன் ஜடாவா்மன் சுந்தர பாண்டியனாகும். இவனுடன் ராஜாங்க அமைச்சா் தரத்தில் இருந்தவன் புவனேக வீர பாண்டியன் என வரலாறு கூறுகின்றது. இக்காலப் பகுதியில் இலங்கையில் அரசாண்ட சிங்கள மன்னனாகிய முதலாம் புவனேகபாகுவை இவன் வெற்றி கொண்டதால் ஸ்ரீ சங்கபோதி புவனேகபாகு என்ற பட்டத்தையும் ஏற்க வேண்டியதாயிற்று. வீர பாண்டியனின் மெய்க்கீா்த்தி கூறும் குடுமிய மலைச் சாசனத்தில் (AR NO 356 of 1906) இவை பாடலாக வரையப்பட்டுள்ளன.

**முழங்கு களிறேறிப்**
**பார்முழுதறிய ஊர்வலஞ் செய்வித்**
**தந்தையாண்ட தடங்கடலீழ**
**மைந்தன் பெயரே மரபென நினைப்பிட்**
**டரசிட மகிழ்ந்து அவனூரளிச்சு**
**விரையச் செல்கென விடை கொடுத்தருளி"**

என்ற தொடராலும் சிதம்பரம் கோபுர வாசலில் புவனேக வீர! கொற்கை வீர" எனப் பொறிக்கப்பட்டிருப்பதாலும் உணர முடியும். இம்மன்னன் தனது கயல் சின்னத்தைக் கோணேஸ்வரத்தில் பொறித்தான் என்பதை

**"காண்ணா மன்னவர் கண்டு கண்டொடுங்க**
**கோணாமாமலையினுந் திரிகூட கிரியினும்**
**உருகெழு கொடிமிசை இரு கயலெழுதி................."**

என்ற தொடரால் (குடுமியமலைச் சாசனம்) தெட்டத் தெளிவாக அறிய முடியும்.



கி. பி. 1624 - 27 ஆண்டுகாலப் பகுதியில் போர்த்துக்கேயத் தளபதியாக இருந்தவன் கொன்ஸ்தாந்தின் திசா. போர்த்துக்கேய அரசனுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் திருகோணமலைக் கோட்டையைப் பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளான்.

"இந்தக் கோயில் அமைந்திருக்கும் நிலத்தின் நீளம் 1200 யாா், மிகவும் அகன்ற பாகம் 80 அடி. ஒடுங்கிய பகுதி 30 அடி. இப்பகுதி கொடிமுடிகள் பலவும் சூழ்ந்துள்ளமையால் பகைவா் அண்மிக்கக் கஷ்டமானது. இதை இந்தியாவில் உள்ள பலம் மிகுந்த அரணபோலச் செய்ய எடுக்க வேண்டிய செயல்கள் சொற்பம்தான். நான் அங்கு சென்றிருந்த போது பல சிலாசனங்களிடையே பின்வரும் கருத்தமைந்த சாசனம் ஒன்று வரையப்பட்டிருப்பதைக் கண்டேன். இக்கோயில் பறங்கிச் சாதியினரால் அழிக்கப்படவும் காலம் வரும். அதன் பின் இக்கோயிலைப் புனர்நிர்மாணம் செய்ய இலங்கையரசால் முடியாது"

அந்தக் கல்வெட்டுக் கீழே குறிக்கப்படுகின்றது. முன்னே குளக் கோட்டன் மூட்டுந் திருப்பணியை பின்னே பறங்கி பிரிக்கவே - மன்னவன் பின் பொண்ணாதனை இயற்ற அழித்தே வைத்து எண்ணாரே பின்னரசா்கள்.

(அழிந்த அச்சரங்களைக் கொண்டு நிரப்பப்பட்ட ஆதாரம் விசேட ஆராய்ச்சிக் குறிப்புக்கள் வரலாற்று ஆசான் வி. குமாரசாமி - 1935)

## குவைரோஸ் சுவாமிகள் சொல்வது

கோணேஸ்வரத்தைச் சந்தா்ப்பம் பாா்த்து இடித்தவன் போா்த்துக் கேயத் தளபதி கொன்ஸ்தாந்தைன் திசாவே. இதனால் கண்களை இழந்தான் என்று குவைரோஸ் சுவாமியாா் தமது இலங்கைச் சரித்திரத்தில் குறிப்பிட்டுள்ளாா். இதனை விட அவா் தாம் எழுதிய இலங்கைச் சரித் திரத்தில் கோணேஸ்வரா் ஆலயம் கி. மு 1300ம் ஆண்டளவில் கட் டப்பட்டது எனக் கூறியுள்ளாா்.

எமது பெரும்பான்மைச் சகோதரா்கள் கி. மு 7ம் நூற்றாண்டில் விஜயனுடன் தாம் வந்த பிற்சந்ததியினா் என்றே கொண்டாடுகின்றனா். விஜயன் இலங்கை வந்தபோது இங்கு குவேனி தொடக்கம் நாகா்கள், இயக்கா்கள் வரை வாழ்ந்தாா்கள். இவா்கள் திராவிடா்கள் என வரலாறு

கூறும் கோயில்கள் இருந்திருக்கின்றன. தமிழரால் அவை ஆளப்பட்டுள்ளன. இவை விஜயன் வருவதற்கு 6ம் நூற்றாண்டிற்கு முன்பிருந்த வரலாறு!

கி.மு 13ம் நூற்றாண்டிலேயே கோயிலும், குளமும் அழகு தமிழும் வளர்த்த தமிழ் மக்கள் நம் நாட்டில் வாழ்ந்திருக்கிறார்களென்பதற்கு இச் சான்றாதாரங்களே போதுமானவையாகும்.





# (3) சிங்கள மன்னர் சபைகளில் ஆட்சி புரிந்தது தமிழே!

பேட்டை என்பது ஒரு தமிழ்ப் பதமாகும் அதுவே "பெற்றா" என மருவி வழங்குகின்றது. 'கோட்டை' என்பதும் அவ்வாறே அதுவே கொட்டுவா என்று திரிந்து போயிற்று.

இன்றைய கோட்டை ஜெயவர்த்தனபுரத்தில் ஆட்சி மொழி சிங்களம். ஆனால் இலங்கையைப் பிரிட்டிஸார் கைப்பற்றும் வரை அரசு மொழி தமிழாகவே இருந்தது எனலாம். இதற்குச் சரித்திரச் சான்றுகள் பல உண்டு. இலங்கையின் ஆதிகால வரலாற்றினில் சிங்கள மொழி அதிகளவாக வளர்ச்சியடைந்து இருக்கவில்லை. இதனால் மன்னர்கள் யாவரும் தமிழ் மொழியை விருத்தி செய்வதில் தான் தமது நிர்வாகம் சீர்பெறும் எனக் கருதினார்கள்.

இளவரசன் விஜயபாலாவும் இரண்டாவது ராஜசிங்கவும் எழுதிய கடிதங்கள் யாவும் தமிழ் மொழியிலேயே எழுதப்பட்டிருக்கின்றன. போர்த் துக்கேய வரலாற்று ஆவணங்கள் தர்மபாலாவைப் பெரிய பண்டாரம் என்ற குறிப்பிடுகின்றனவே தவிர மஹா பண்டாரம் என்று குறிப்பிடவில்லை.

## வரலாறு பகரும் உண்மைகள்

கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன் பலருடன் கொண்ட தொடர்புகள் யாவும் தமிழ் மொழியிலேயே உள்ளன. இக்கடிதங்களின் உண்மைத் தகவல்களை நுவரெலியாவில் உள்ள நூதன சாலையில் காணலாம். பிரேஞ்சு மன்னன் 16வது லூயிக்கும் கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கனுக்கும் இடையே 1777ம் ஆண்டில் ஒரு நட்பு உடன்படிக்கை கைச்சாத்திடப்பட்டது. இந்த உடன்படிக்கை சிங்கள மொழியிலேயோ அல்லது பிரெஞ்சு மொழியிலோ எழுதப்பட்டதல்ல. அது தமிழ் மொழியிலேயே எழுதப்பட்டுள்ளது. நீங்கள் ஆச்சரியப்படலாம். ஆனால் வரலாற்றினை மூடி மறைப்பது என்பது மிகவும் கஸ்டமான ஒன்று தான். இந்த உடன்படிக்கையின் மூலப் பிரதிகள் பாண்டிச்சேரியில் உள்ள தொல்பொருட்காட்சிசாலையில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

இலங்கையைப் பொறுத்தமட்டில் தமிழ் ஆட்சிமொழியின் இடத்தை

வகித்தது என்பதற்கு இதைவிட அதிக வரலாற்று ஆவணங்கள் தேவையென்பது மிகைப்பட்ட கூற்றே!

சிங்கள மக்களின் கலை இலக்கியத்திற்கு அன்று ஆட்சி மொழியாக இருந்த தமிழ் மொழியில் இருந்தே இலக்கியங்கள் மொழிபெயர்க்கப்பட்டன என்று வரலாற்று ஆசிரியர் டபிள்யூ ஏ. டி சில்வா எழுதியுள்ளார். ராமாயணம் அரிச்சந்திரா என்ற புராண இதிகாசங்கள் சிங்கள மக்களின் விருப்பத்திற்கு அமையவே சிங்கள மொழியில மொழி பெயர்க்கப்பட்டன. கண்ணகியை வழிபடும் தெய்வமாகச் சிங்கள மக்கள் ஏற்று உள்ளனர். தமிழ் உயர்ந்த இலக்கியங்களில் இருந்து உயர்ந்த ஒழுக்கக்கட்டுப்பாடான கற்பு நெறியை அவர்கள் ஏற்கப்பழகியமையே இந்தத் தெய்வ வழிபாட்டின் அடிப்படையாகும்

மூன்றாவது பராக்கிரமபாகுவின் அரண்மனை தமிழ் மொழியில் "பாண்டித்தியம்" பெற்றவர்கட்கு முன்னிலை வழங்கியது. அவருடைய அரண்மனையில் இருந்த போதிராஜா என்பவரால் தான் சரஜோதி மாலை தமிழில் பாடப்பட்டது. பின்பே. அது சிங்களமொழிக்கு மொழி பெயர்க்கப்பட்டது.

## பௌத்தமும் தமிழும்

இன்றைய பௌத்தம் சிங்களமொழியினை அங்கீகரித்து உள்ளது. ஒரு மதத்திற்கு ஒரு மொழி எனக் கொள்வது குறுகிய இனவாதமே. சைவமும் தமிழும் ஒன்று என ஒருகாலத்தில் வாதிடப்பட்டது. ஆனால் அது ஒன்று அல்ல. அது பிழையானது என ஆறுமுகநாவலர் கூட வாதாடத் தயங்கவில்லை.

பௌத்தம் இலங்கையில் பரப்பப்பட்டமைக்கு அன்று முக்கிய மொழியாக இருந்த தமிழே காரணம். அன்று பௌத்த சந்நியாசிகள் தமிழ் மொழியிலேயே உபதேசம் செய்தனர். இலங்கையில் லோகர்தீசனின் ஆட்சிக் காலத்தில் ( கி.பி 169 - 291 ) அபயகிரி விகாரையில் தமிழ் மொழியிலே மதம் பரப்பும் தொண்டுகள் தொடர்ந்தன.

ஆயினும் அடுத்து வந்த கோதாபயனின் ஆட்சிக்காலத்திலே அங்கிருந்த இலக்கியங்கள் யாவும் எரிக்கப்பட்டு அங்கிருந்த 60 சந்நி யாசிகளும் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டனர்.



## தமிழ்த்துறவி சங்கமித்தை

சங்கமித்தை வந்த காரணம் முதலில் பௌத்தத்தைப் பரப்புவது மட்டுமல்ல. நாட்டை விட்டுத் துரத்தப்பட்ட அந்த அறுபது சந்நியாசிகளின் எதிர்காலத்தை நிர்ணயிப்பதற்குத்தான்.

சங்கமித்தை தமிழ் பேசிய ஒரு தமிழ் பௌத்தத் துறவியே. இவ்வாறு மகாவம்சமும் ஒத்துக் கொள்கின்றது (மகாவம்சம் கைகர் அத்தியாயம் XXXVi v113)அத்துடன் அவள் சோழநாட்டுக்கு உரியவளே என்பதையும் இதே மகாவம்சம் மறுக்கவில்லை.

இலங்கைக்கு வந்த சங்கமித்தை கோதாபய மன்னனின் பிள்ளை களான ஜெதீசனுக்கும், மகாசேனனுக்கும் ஆசிரியையாக நியமிக்கப் பட்டாள். கோதாபயனின் இறப்பிற்குப் பின்பு ( கி.பி 323 - 333) ஜெக தீசன் அரசாண்டான். அவன் அரசாண்ட போது சங்கமித்தை இங்கு இருக்கவில்லை. பின்பு மகாசேனன் அரசனானபோது சங்கமித்தை பௌத்தத்தைப் பரப்புவதில் அரசனால் அங்கீகரிக்கப்பட்டாள்.

சங்கமித்தை காலத்தில் போதிமார் என்ற தமிழ் பௌத்த சந்நியாசி வாழ்ந்தார். இவர் கி.பி 520 ல் சீனாவிற்கு (கன்ரன்) நகருக்கு வந்து சேர்ந்தார். இவர் காட்டிய வழியைப் பின்பற்றியோர் சௌ குழுவினர். ராமோ என்றே இவரைச் சீனர்கள் அழைத்தனர். இன்றும் சீனாவில் முக்கியமாகக் குறிப்பிடப்படும் 25 சமயகுருவானவர்களில் ராமோ எனப்படும் இந்தத் தமிழ்ப் பிரிவும் அடங்கும்.

## நீதிமன்றத்தில் தமிழ்மொழி

வடக்கிற்கும் கிழக்கிற்கும் வெளியே புதைபொருளாராய்சியாளர்களால் தமிழ் மொழியில் பெருந்தொகை கல்வெட்டுக்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. தமது பாரம்பரியப் பிரதேசங்களிற்கு அப்பால் அம்மொழியில் கல்வெட்டுக்கள் இருப்பின் அம்மொழி நீதித்துறையில் அப்பிரதேசத்தில் செல்வாக்குப் பெற்றிருக்கவேண்டும்.

இலங்கையில் காலி, சிலாபம், கம்பொல, குருநாகல், கண்டி, கோட்டை, கோட்டகம, பதவியா, பாலமோட்டை, பொலநறுவை, செங்கடகல என்ற இடங்களில் அதிகளவு தமிழ் கல்வெட்டுக்கள் உள்ளன. இவை

நீதித்துறையில் தமிழ்மொழியின் செல்வாக்கை நிலை நிறுத்துகின்றன.

இலங்கையில் கோட்டை ஜெயவர்த்தனபுரவை தலை நகராகக் கொண்டு ஆண்ட மன்னர்களில் தமிழ் கலப்பு இல்லாது அரசாண்ட மன்னர்கள் அரிது. அவர்களின் தகப்பன் சிங்கள அரசகுமாரனாக இருந்தால் தாய் கலிங்கத்தில் இருந்தோ, சோழநாட்டிலிருந்தோ வந்த இளவரசி யாகத்தான் இருப்பாள்.

கோட்டை ஜெயவர்த்தனபுரத்தில் அரசாண்ட 6வது பாராக்கிரமபாகு தொடங்கி ( 1412 - 1468) தர்மபாலா (1551 - 1597) வரை இந்தக் கலப்பினக் கோட்பாட்டிலிருந்து தப்பவில்லை

ஆறாவது பராக்கிரமபாகு தனக்குப்பின் தனது பேரனான தர்மபாலா வுக்கத்தான் அரசுரிமை வழங்க வேண்டும் என நீதிமன்றத்தில் இருந்து செல்லப்ப ஆராய்ச்சி என்பவரை. ஒரு சிறிய தர்மபாலச்சிலையுடன் அனுப்பினான். இது நீதிமன்றத்தில் தமிழர்களினதும் தமிழ் மொழியினதும் மேன்மை நிலையைப் புலப்படுத்துகின்றது.

பிராமணர்களின் ஆதிக்கமே நீதிமன்றங்களில் அதிகம் காணப்பட்டது. தென்னிந்திய முறையை ஒட்டியே நீதி வழங்கப்பட்டது. இதனால் தமிழ் மொழியிலிருந்து பங்கு, பங்குக்காரர், நிந்தகம், ஊழியம், பட்டம்,, உழைப்பு என்பன சிறிய மாற்றங்களைக் கண்டு சிங்கள மொழியில் சிங்கள உரு வத்துடன் இணைந்தன. இக்காரணம் பற்றிய சிங்கள அறிஞரான டபிள்யூ. எ.ப். குணவர்த்தனா தமிழ் இன்றிச் சிங்களம் இயங்காது என்றும் சிங்க ளமும் ஒரு திராவிடமூல மொழியே என்றும் எடுத்து உரைத்தார்





# (4) புத்த மதத்தை வளர்த்த தமிழ்த் துறவிகள்

சுமார் நாற்பத்து ஐந்து ஆண்டுகட்கு முன்பு மயிலை சீனி வேங்கடசாமி போன்ற சமய வரலாற்று ஆய்வாளர்கள் புத்தத்துக்கும், தமிழ் மொழிக்கும் உள்ள மிகப் பெரும் தொடர்புகளை ஆராய்ந்து உள்ளார்கள். இந்த ஆய்வுகள் சிங்கள இனமும் புத்தமும் என்ற ஆய்வுகள் வலிந்து காட்டும் உண்மைக்கு முற்பட்டவை. இந்த நூலில் காட்டப்பட்டிருக்கும் தமிழ் பௌத்தத்துறவிகள் பட்டியலை இலங்கை வரலாறு உள்வாங்குமாயின் பல வரலாற்று ரீதியான பிரச்சினைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்படும். சிலப்பதிகாரத்தில் கண்ணகி பாண்டிய மன்னனை விளித்துத் "தேரா மன்னா" என்கின்றாள். தேரா என்பது ஆய்ந்து அறியாத என்ற பதத்தில் இங்க பாவிக்கப்பெற்றது. தேரர் என் பது தேர்ந்தவர். ஆய்ந்தவர் என்ற நேரெதிர்ப்பதத்துக்கு உரியது.

## தமிழ்ப் புத்தத்துறவிகள்

### 1. பெருந்தேவன்

பெருந்தேவனார் என்ற பெயருடைய தமிழாசிரியர் சிலர் பண்டைக் காலத் தில் இருந்திருக்கின்றனர். கடைச் சங்க காலத்தில் இருந்து பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பவரும் பிற்காலத்தில் இருந்து பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பவரும் வேறானவர்கள். இந்தப் பெருந்தேவனார் புத்தர். புத்தமித்திரனார் என்பவரின் மாணவர். புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியம் என்னும் இலக்கண உரையாசிரியர் இவரை

**"தடமார் தரு பொழிற் பொன் பற்றி**
**காவலன்தான் பொழிந்த**
**படிவீர சோழியக் காரிகை**
**நூற்வெண்பஃ தொமொன்றின்**
**திடமார் பொழிப்புரையை**
**பெருந்தேவன் பெருஞ்சுழிச்சக்**
**கடனாகவே நவின்றான்**
**தமிழ்க்காதலிற் கற்பர்க்கே"**

என்னும் வீரசோழிய உரைபாயிரச் செய்யுளால் அறியலாம்.

## 2. கவிராசராசர்

இவர் ஒரு புத்தமதப் புலவர். இவர் தமிழ்க் கவி இயற்றுவதில் கைதேர்ந்தவர் என்பது இவரது இயற்பெயரினால் அறியப்படும். "வன்பசிக் கடும்புலிக் குடம்பளி துடம்பின் மேல் வாயினோடு பால் கரந்து" என்னும் செய்யுள் அடியை மேற்கோள் காட்டி இது கவிராசன் வாக்கு என தக்கயாகப் பரணி உரையாசிரியர் கூறி இருப்பதில் இருந்து இப் பெயருடைய புலவர் ஒருவர் இருந்தார் என்பது புலனாகிறது.

## 3. காசபதேரர்

இவர் சோழ காசபர் என வழங்கப்படுகிறார். பாளி மொழியையும் பௌத்த நூல்களையும் இவர் நன்கு கற்றுள்ளார். மோக விச்சேதனி, விமிதி, வினோதினி அநாகதவம்சம் ஆகிய நூல்களை இவர் இயற்றியுள் ளார். இவர் டமில தேசத்துச் சோழ நாட்டவர் என்று கந்தவம்சம், சாசனவம்சதீபம் என்ற நூல்கள் கூறுகின்றன. ஆகவே சோழநாட்டைச் சேர்ந்த தமிழர் என்பது பெறப்படும். இவர் இயற்றிய மோகவிச்சேதனி என்ற நூலிலே காவிரியாறு பாயும் சோழநாட்டில் நாகநகரத்தில் (நாகபட்டினம்) இருந்த நாகானை விகாரையில் இவர் இருந்ததாகக் கூறப்படுகின்றது.

## 4. சீத்தலைச்சாத்தனார்

இவர் புத்தர் என்பது இவரின் பெயரில் தெரியும் உண்மை. மதுரை மாநகரில் வாணிகம் செய்து இருந்தமையால் இவரை மதுரை வாணிகன், கூல வாணிகன் சாத்தனார் என்றும் சொல்வர்.

சாத்தன் என்ற பெயர் தமிழ் நாட்டில் பண்டைக் காலத்தில் பலருக்கு வழங்கி வந்தது. சங்ககாலப் புலவர்களில் 20க்கு மேற்பட்டவர்கள் சாத்தன் என்ற பெயரைக் கொண்டவர்கள். இவர்கள் ஒவ்வொருவரையும் வெவ்வேறு அடைமொழிகளைச் சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன. நம் சாத்தனாருக்கும் வெவ்வேறு அடைமொழிகளைச் சங்க நூல்கள் குறிப் பிடுகின்றன. இவர் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தவராக இருக்க வேண்டும். ஏனெனில் மணிமேகலையில் புகார், மதுரை, வஞ்சி, காஞ்சிபுரம் போன்ற ஊர்கள் குறிப்பிடப்படுகின்றன. சேரநாட்டினை ஆண்ட செங்குட்டு வனுக்கும் அவரின் தம்பிக்கும் இவர் உற்ற நண்பர். இவர் காலத்தில் தான் கோவலன் பாண்டி நாட்டில் கொலையுண்டான். சிலப்பதிகாரத்தின்



தொடர்ச்சியாக மணிமேகலையை இயற்றிய சீத்தலைச்சாத்தனார் நற்றிணையில் மூன்று குறுந்தொகையில் ஒன்று. அகநானூற்றில் ஐந்து இவரால் இயற்றப்பட்டது. என்பர். தனது பாடல்களில் இவர் திருவள்ளுவரை மேற்கோள் காட்டியுள்ளதால் இவர் திருவள்ளுவருக்கு பிற்பட்டவராக இருத்தல் வேண்டும். பெரும்பாலும் இரண்டாம் நூற்றாண்டே இவரின் காலம் என ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள்.

## 5. சங்கமித்திரர்

இவர் சோழநாட்டைச் சேர்ந்த தமிழர். இவர் சோழநாட்டில் வாழ்ந்த காலத்தில் இங்கு மேகவர்ணாபயன், கோதாபயன் என்னும் பெயருள்ள அரசன் ஆண்டு வந்தான். ( கி.பி.302 - 315 ) இவன் காலத்தில் அபயகிரி விகாரையில் அரசாண்ட 60 பிக்குகள் வைதுல்ய மதத்தை மேற்கொண்டி ருந்தபடியால் அவர்களை அவன் தமிழ் நாட்டுக்கு நாடு கடத்தி விட்டான். இலங்கை மன்னன் அச்சமயம் ஈனயான பௌத்தத்தைத் தழுவியிருந்தான்.

வைதுல்ய மதத்தைச் சேர்ந்த சங்கமித்திரர் இலங்கைக்கு மதம் பரப்பச் சென்றார். அரசனுக்கு முறைப்பாடு செய்யப்பட்டது. ஈனயான மதத்தைச் சேர்ந்த சங்கபாலர் என்பவருக்கும் சங்கமித்திரர்க்கும் இடையில் வாக்குவாதம் நடைபெற்றது. ஈற்றில் தமிழரான சங்கமித்திரரே வென்றார். தனது பிள்ளைகளான ஜேத்ததீசன், மகாசேனன் என்பவருக்கும் குருவாகச் சங்கமித்திரர் நியமிக்கப்பட்டதாக வரலாறு கூறுகின்றது.

ஜேத்ததீசன் என்ற மன்னன் இவரிடம் விரோதம் பாராட்டினான் (கி. பி. 323 - 33) இவர் ஆட்சியில் சில மந்திரிகள் கொலை செய்யப் பட்டார்கள். இவன் முன்பே பகைமை பாராட்டிய மாணவன் என்பதால் அவர் இலங்கையை விட்டுப் புறப்பட்டுவிட்டார். பின்பு மகேசேனன் (334 - 361) அரசாட்சி செய்தான் . இதனால் மீண்டும் இவர் இலங்கைக்குத் திரும்பி வந்தார். மகாசேனனுக்கு ஈனயான பௌத்தமதத்தைச் சேர்ந்த மனைவி ஒருத்தி வந்தாள். இதனால் ஈனயான புத்த மதத்தை அடக்கி யாண்ட சங்கமித்திரரையும் அவருக்குத் துணையாக இருந்த சோணனையும் கொன்று விடும்படி ஏவினாள்.

இவ்வாறு சங்கமித்திரரின் கதை முடிந்தது ( மகா வம்சம் 36 - 37) இவற்றைவிட தமிழ்நாட்டில் ராகுலதேரர், புத்தசிகா, மகாவஜ்ஜிரபுத்தி, தம்மபாலர் போன்ற புத்தர்களும் வாழ்ந்திருக்கிறார்கள் ( சமகாலம்)

### 6. மணிமேகலை

நாம் அறிந்த வகையில் தமிழ் நாட்டில் பெயர் பெற்ற புத்தமதப் பிக்குணி இவள் ஒருத்தியே! இவளது வரலாறு மணிமேகலை நூலில் இருந்தும் அறியப்படுகின்றது.

மணிமேகலையின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு. மணி மேகலை வரலாற்றிலும் பௌத்த மதக் கொள்கைப்படி வானத்தில் பறந்து செல்லுதல் அமுதசுரபி என்னும் சிறுபாத்திரத்தில் நினைத்த போதெல்லாம் வேண்டிய உணவினை உண்டாக்கிக் கொடுத்தல் முதலிய ரித்திகள் சொல்லப்பட்டுள்ளன. இந்த நூல் பௌத்த சமயக் கொள்கை யைத் தமிழ் மக்களில் சில பகுதியினர் சிலகாலம் ஏற்றுக் கொண்டார்கள் என்பதற்கான அத்தாட்சிகளாகும்.

### 7. தர்மகீர்த்தி

இவர் தம்பரட்டா என்ற பாண்டிய வம்சத்தைச் சேர்ந்தவள். தாமிர பரணி பாயும் பாண்டிய நாட்டினைத் தம்பரட்டா எனப் பௌத்த நூல்கள் கூறுகின்றன. (இது தாமிரபரணி என்பதன் சிதைவு என வரலாற்று ஆய் வாளர்கள் கூறுகின்றார்கள்) இரண்டாம் பராக்கிரமபாகு இவனை வரவழைத் தான். அன்றியும் சோழநாட்டில் இருந்து பௌத்தப் பிக்குகளையும் வர வழைத்து மாநாடு ஒன்றையும் கூட்டினான். இந்த அரசன் தர்மகீர்த்தியிடம் தனிப்பட்ட மரியாதையும் வைத்திருந்தார். தாட்டா வம்சம் என்ற பாளி மொழிநூல் இவரால் இயற்றப்பட்டதே. மகாசேனன் தொடக்கம் இரண்டாம் பராக்கிரமபாகு வரையுள்ள காலத்தை இவனே இயற்றியதாகச் சொல் லப்படுகின்றது. 2ம் பராக்கிரமபாகு இலங்கையைக் கி. பி. (1260 முதல் 1268 வரை அரசாண்டான்.

### 8. சத்தம் மஜோதிபாலர்

இவரின் மறுபெயர் சாபதர். இவர் பர்மாவுக்குச் சென்ற காலத்தில் நரபதி ஜயசூரன் என்னும் அரசன் இவருக்கு யானை ஒன்றைப் பரிசாக அளித்தான் என்றும் இதனை இவர் காஞ்சீபுரம் கொண்டுவந்தார் என்றும் கல்யாணி நகரத்துக் கல்வெட்டுச் சொல்லுகின்றது. இவர் கி. பி. 1245ல் காலமானதாக அக் கல்வெட்டுச் சொல்லுகின்றது. இக்கட்டுரையின் விரிவஞ்சி மற்றையவர்களின் பெயர்கள் தரப்படவில்லை.



## பொட்டிட்ட புத்தர்

தமிழகத்தில் உள்ள புத்தர் சிலைகள் நெற்றியில் பொட்டு வைக் கப்பட்டவை. இவ்வகையில் திருவலஞ் சுழியில் அமைந்துள்ள புத்தர் சிலையைச் சிறப்பாகச் சொல்லலாம். நன்னிலம் என்ற இடத்தில் உள்ள புத்தர் சிலை ( தஞ்சாவூர் மாவட்டம்) சங்க மங்கலம், போதி மங்கலம், புத்தகுடி, பெருஞ்சேரி, கோட்டப்பாடி, மயூரப்பட்டணம் ஆகிய இடங்களிலும் அதிகளவான புத்தர் சிலைகள் கண்டெடுக்கப்பட்டன. புத்தர் ஆதியில் இந்து மதத்தில் தான் பிறந்தார் என்பதும், தமிழ் மக்களில் ஒரு சிலர் அவரின் இறப்பின் பின்பு அவரின் கொள்கைகள் சிலவற்றைப் பின்பற்றினர். என்பதும் ஒன்றும் ஒழிக்கக்கூடிய விடயங்கள் அல்ல. தமிழ் மக்களாலே வளர்க்கப்பட்ட புத்தமதம் அதன் மதபோதகர்களால் தமிழ் முன்னுரிமை கொடுக்காமையே அதன் மறைவுக்குக் காரணம். புத்தர் வழிபாட்டு முறைகள் தமிழ் நாட்டின் ஊடாக யாழ்ப்பாணம் வந்திருக்க முடியும். சிங்கள மொழிக்கும் சிங்கள இனத்துக்கும் முடிச்சுப் போடுவது வரலாற்றின் பிழையான வாதம் இதை நீக்க வழி செய்தல் வேண்டும்.



# ⑤ இலங்கைத் தமிழர் வரலாற்றுக்கு உரமூட்டும் சீனத்து வரலாற்று ஆதாரங்கள்

இலங்கையின் வரலாற்றை ஆராய்வதில் புராதன நூல்கள், நாண யங்கள், கல்வெட்டுக்கள் என்பனவே பெருமளவு துணை செய்துள்ளன. ஆயினும் வெளிநாட்டு வரலாற்று ஏடுகள் இத்துறையில் பெருமளவு ஒப்பு நோக்கப்படவில்லை. தமிழ் மக்களின் வரலாற்றைப் பொறுத்த மட்டில் கூட வெளிநாட்டு ஆதாரங்கள் பெருமளவு ஆராயப்படவில்லை. இலங்கையின் வடபகுதியை பொறுத்த மட்டில் அங்குமக்களின் குடியேற்றங்கள் கி.பி 13ஆம் நூற்றாண்டில்தான் உருவாகியுள்ளன எனக் காலஎல்லையை எட்டிப்போடுகின்றர் தொல்பொருளியல் ஆணையாளரான திரு.பரணவிதான அவர்கள். அவரின் கருத்துக்களை அடியொற்றிய ஆரம்ப கால ஆய்வுகளில் கலாநிதி திரு.கா. இந்திரபாலா அவர்களும் இக் கருத்தையே வலியுறுத்தி யுள்ளார். (பார்க்க: யாழ்ப்பாண ராச்சியத்தின் தோற்றம்)

இலங்கையின் வரலாற்றைப் பொறுத்த மட்டில் நிராகரிக்க முடியாத பல ஆதாரங்களைச் சீனத்து அதிகாரமிக்க வரலாற்று ஏடான கைப்பிங் யூலான் கொண்டிருக்கின்றது. இவற்றின் சுவையான வரலாற்றுக் குறிப்புகள் பல்வேறு காலகட்டங்களில் சீனாவில் இருந்து இலங்கைக்கு வந்த கடலோடிகளின் குறிப்புக்களால் பதிவு செய்யப்பட்டுள்ளன. இச் சுவையான குறிப்புகள் இலங்கையில் தமிழ் மக்களின் தொன்மையைப் பறைசாற்றி நிற்கின்றன.

### பூனான் ருசு

சீனத்து வரலாற்று ஏடுகளில் இலங்கை சூற்றில் ஆஓ எனக் குறிக்கப் படுகின்றது. 12 ஆம் நூற்றாண்டின் பின்பே இலங்கை சீலோன் எனச் சீனத்து எழுத்துக்களில் குறிக்கப்பட்டு இருக் கிறது. இலங்கைக்கு கி.பி 3ம் நூற்றாண்டில் வந்த சீனத்து கடலோடி பூனான் ருசு என்பவரின் வரலாற்றுக்குறிப்பு ஒன்றினை சீனத்து வரலாற்று ஏடான தை பிங் யூலான் அதிகாரம் 787 பதிவு செய்துள்ளது. இலங்கையின் குடாக்களிலே உப்பு விளைகின்றது இங்கு விளையும் உப்புக்களில் தேவையான பகுதிகளை மக்கள் எடுத்துக்கொண்டு மிகுதியை அரசுக்கு அளித்து விடுவர் என அந்த வரலாற்றுக் குறிப்பு கூறுகின்றது.



இலங்கையின் வடபகுதியில் 13ஆம் நூற்றாண்டில் இருந்தே குடி யேற்றங்கள் ஆரம்பமாயின. எனக்கூறுபவர் திரு.பரணவிதான அவர்கள். 13ஆம் நூற்றாண்டுக்கு முன்பு இவ்விடங்களில் குடியேற்றங்கள் இருந்தி ருப்பின் அவைகள் பேயும் பிசாசுகளும் என அவர் நகைச்சுவையாகக் குறிப்பிட்டார். இலங்கையில் இருக்கும் குடாக்களிலே உப்பு விளைகிறது மிகுதியை அரசனுக்கு குடிமக்கள் கொடுக்கின்றார்கள். என்பதே சீனரது வரலாற்று ஏடு சொல்லும் செய்தி. இலங்கையின் பிரபல்யமான குடாக்கள் யாவை? கொட்டியாரக்குடா, யாழ்ப்பாணக்குடா, மன்னார்குடா, அறுகம்குடா, தாழம்குடா, கற்குடா இவ்வாறு அவை விரிந்து செல்லும். கி.பி 3ம் நூற்றாண்டின் பின்பு இந்தக்குடாக்களில் எதுவும் நிலத்தில் மறைந்ததாகவோ நீரினால் அள்ளுண்டதாகவோ வரலாறு இல்லை. இந்தக்குடாக்கள் யாவும் வடக்கிலும் கிழக்கிலும் அமைந்த இயற்கையான குடாக்களே. இங்கு மக்கள் உப்பை அள்ளினார்கள் என்றால் அது வரண்ட குடாவான மன்னார் குடாவையே குறிக்கும் என்பது வெளிப்படையானது. இலங்கையின் வடபகுதியில் மக்கள் தோற்றம் 13ஆம் நூற்றாண்டிலோ அதன் பின்னரோ ஏற்பட்டு இருக்குமாயின் உப்பை அள்ளியவர்கள் பேய்களாக இருக்கக்கூடும். இதைவிட வரலாற்றுக்கு நகைச்சுவை தரும் விடயம் எதுவும் இருக்க முடியாது.

இலங்கைக்கு வருகை தந்த சீனத்து ஆரம்ப காலகடலோடிகளில் ஒருவர் வூசி - வாய்கு - சூ - ஆன் என்பவர். இவரின் குறிப்பு ஒன்றினைச் சீனத்து வரலாற்று ஏடான தை பிங் யூலான் (அதிகாரம் 699) பதிவு செய்து வைத்துள்ளது. இலங்கையில் இருந்து குளிக்கப்பட்ட முத்துக்கள் இந்தியாவின் மன்னர்களுக்கும் கோயில்கட்கும் அனுப்பப்பட்டன என அவர் கூறுகிறார். இலங்கையில் முத்துக் குளிப்பில் பிரபல்யமான மன்னாரயே சுட்டுகின்றார் என்பது தெளிவானது. கி.பி 3 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இலங்கைக்கு வந்த இக் கடலோடியின் குறிப்பில் இருந்து இலங்கையில் வடபகுதிக் குடியேற்றங்கள் அனாதியானவை என்பது துலாம்பாரமாக எடுத் துக்காட்டப்படுகிறது.

### கடலின் நடுவே தீவு அங்கே தீ தீ தீ

இலங்கைக்கு கி.பி 3ஆம் நூற்றாண்டில் வருகை தந்து இலங்கையைப்பற்றி சில குறிப்புக்களை தந்துள்ளார். நான் பாங் வூச்சி. இவரின் குறிப்பு ஒன்றினை சீனத்து வரலாற்று ஏடான தை பிங் யூ லான் அதிகாரம் 787 இல் பதிவு செய்து வைத்துள்ளது. அவர் கூறுகின்றார். இலங்கையின் கடலின் நடுவே நெருப்புத் தீவு ஒன்று உள்ளது .கோடை

காலத்தில் இங்கு தீயேற்றி வைக்கப்படுகிறது. இந்தத் தீ ஒருபக்கம் இருக்கட்டும் அது மரக்கலங்களுக்கு வழி காட்டும் தீயாக இருந்திருக்க நியாயம் உண்டு. அது ஒரு பக்கம் இருக்க அவரின் கூற்றில் இருக்கும் சாற்றை எடுப்போம்.

இலங்கை ஒரு தீவு அதற்கு சொந்தமான தீவுகள் எப்பக்கத்தில் உள்ளன? அனலைத் தீவு, நெடுந்தீவு, காரைதீவு, நயினாதீவு, எழுவைதீவு, புங்குடுதீவு, காக்கைதீவு, கச்சைதீவு என எடுத்துக் கொண்டாலும் எல்லாத் தீவுகளும் வடபகுதிக்குள் சென்று முடிகின்றன. எனவே தீ எரிந்த தீவு வட பகுதியில் இருந்த தீவு என்பது வெளிப்படையானது அங்கே முன்னையிட்ட தீ மரக்கலங்களுக்கு வழி காட்டியாக அமைந்த தீ என் பதை நிராகரிப்பது கஷ்டமானது. தீ மூட்டுவதற்குப் பயன் படுத்தப்பட்டது எண்ணெயும் சேலையும் என்கின்றார்.. அந்த கடலோடி கி.பி 3ஆம் நூற்றாண்டிற்கு முன்பே பட்டிலும் பருத்தியிலும் நாகரீகமாக உடைகளைப் பின்னிய நாகரீகமான எமது ஜாதியினரின் வரலாற்றினையே அந்த யாத்திரிகர் சொல்லாது சொல்லியுள்ளார்.

## மூன்று ராச்சியங்கள்

கி.பி 4ஆம் நூற்றாண்டில் இலங்கைக்கு விஜயம் செய்த மற்றொரு கடலோடி நான்செள. இவரின் இலங்கை வரலாற்றுக் குறிப் பினைச் சீனத்து வரலாற்று ஏடான தை பிங் யூலான் 789ஆம் அத்தியா யத்தில் பதியப்பட்டுள்ளது. அவர் கூறுகின்றார். இந்தத் தீவில் மூன்று இராச்சியங்கள் இருக்கின்றன. வீதிகளும் பாதைகளும் நிறைந்துள்ளன. இலங்கைத்தீவின் மண்செழிப்பு நிறைந்தது. இலங்கைத் தமிழர்களின் வரலாற்றையும் ஆதிக்குடியிருப்புக்களையும் கி.பி 13ஆம் நூற்றாண்டில் தள்ளிவிடும் வரலாற்று ஆய்வாளர்கள் இலங்கை வரலாறு பற்றிச் சீனத்து ஏடுகள் தரும் செய்திகளை அறியவில்லை போலும்!!.

## 8 பாதச் சுவடுகளில் ஏழு எங்கே?

இலங்கையின் வரலாறு பற்றிப்பல சுவையான தகவல்களைத் தந்துள்ள சீனக் கடலோடி ஐவன் பிச்சு என்பவர் இலங்கையைப் பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளார். "இந்தத் தீவு பெரும் மலைத்தொடர் களைக் கூட்டமாக கொண்டுள்ளது. 20000 அடி கொண்ட மலைத் தொடரில் 8



பாதச் சுவடுகள் காணப்படுகின்றன. இவற்றுக்குப் போதி சத்துவர்கள் 6 மாதத்திற்கு ஒருதடவை விழா எடுப்பர் 8 பாதச் சுவடுகள் இருந்த மலையில் இப்போது ஏழும் மறைந்து விட்டதுவோ? மறைந்து விட்டஅந்த ஏழுபாதச்சுவடுகளும் எங்கே?

## சீனத்து ஏடுகளில் தமிழ் வரி வடிவச்சொல்

இலங்கையில் இந்து மதத்தின் தொன்மையைப் பற்றி சீனத்து வரலாற்று ஏடுகள் பொறித்து வைத்துள்ளன. இலங்கைக்கு 3ம், 4ம் நூற்றாண்டுகளில் விஜயம் செய்தவர்களில் ஒருவர் வை குவா சீ என்பவர். சீனவரலாற்று ஏடான தை பிங் யூலான் அதிகாரம் 132 இல் இதனை பதிவிட்டுள்ளது. அந்த ஆதாரத்தில் இலங்கையில் இருந்த பணக்கார கிழவர்கள் தேவசமாதிகள் கட்டியதாகக் கூறியுள்ளார். தமிழ் வடிவத்தில் அமைந்த இச் சொல் சீனத்து வரலாற்று ஏட்டில் அமைந்து இலங்கையில் இந்து மதத்தின் தொண்மையைப் பறை சாற்றியுள்ளது.

## செங்கோவும் இலங்கையும்

செங்கோ என்ற சீனயாத்திரிகர் கி.பி 1405க்கும் 1407க்கும் இடைப்பட்ட காலத்தில் இலங்கைக்கு வந்தார். இவர் இலங்கைக்கு வந்த போது அழகக்கோனார் என்ற அரசனை தோற்கடித்தார். 1409ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் 2ம் திகதி இதனை நினைவு கூறும் கல் வெட்டு காலியில் நிறுவப்பட்டது. இதில் சிங்கள மொழி இல்லை. தமிழ் பாரசீகம் சீனம் ஆகிய மொழிகளே இடம் பெற்றுள்ளன. இதனை வரலாற்றில் இருந்து மறைக்க முடியாது.



# ⑥ வன்னியும் அதன் அழியாத வரலாறும்

கலைப்புலவர் சீ.எஸ் நவரெத்தினம் எழுதிய வன்னியும் வன்னியர்களும் என்ற நூல் (Vanni and vanniyas) வெளியிடப்பெற்று இன்று 35 ஆண்டுகள் ஆகிவிட்டன. மறைந்து போகும் நிலையில் உள்ள இந்த நூலில் இருந்து சில அரியதகவல்கள் கீழே தரப்படுகின்றன. பனங்காமம் என்னும் இடமே வன்னியின் பிரதான தலைநகராக இருந்தது. புத்த சமயத்திற்கு உரிய எந்த அத்தாட்சிகளும் இங்கு இருக்கவில்லை. இந்தப் பாரம்பரியத்தைப் பேணும் ஒரு பகுதியாக பனங்காமம் விளங்கி வந்தது.

வன்னியின் பிரதான நகரங்களில் ஒன்றாக வவுனிக் குளம் இருந்தது. சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் அர்ப்பணிக்கப்பட்ட பல கட்டிடங்கள் இவ்விடம் இருந்ததாக வரலாற்று ஆய்வாளர் ஜே.பி. லூவிஸ் 90 ஆண்டுகளுக்கு முன்பு கூறியுள்ளார்.

இந்து சமய புராதன ஆலயங்களும் வன்னிக் குடியிருப்புக்களும் அதிகம் இருந்த பகுதிகளாக இராசேந்திரக் குளம், மகாகச்சக்கொடி சின்னப்பூவரசன்குளம், ஆகிய பகுதிகள் குறிப்பிடப்பட்டு உள்ளன. ருபன்மடு ஓமந்தை, தண்ணி முறிப்பு, புதுமுறிப்பு, பண்டாரக்குளம் என்பனவும் கலப்பில்லாத வன்னிப் பெரும் நகர்கள். இங்கு சிங்களப்பெயர்கள் கண்டறியப் பட்டதில்லை. வன்னியில் அமைந்துள்ள கும்பகர்ணன் மலையில் சில தமிழ் கல்வெட்டுக்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

மன்னார் மாவட்டத்தின் வன்னிப் பகுதியில் பல கைவிடப்பட்ட குளங்களும் கால்வாய்களும் உள்ளன. அவை தமிழ் சொல்லின் பழைமையை உணர்த்தும் குறிஞ்சாக்குளத் தேக்கம், பேராறு என்பன அவற்றில் முக்கியமானவை.

1560ம் ஆண்டில் யாழ்ப்பாணம் போர்த்துக்கேயரால் கைப்பற்றப்பட்ட பின்பு தமிழர்களின் படையெடுப்புக்கு அஞ்சியே நாலு பக்கமும் அகழிகள் கொண்ட மன்னார்க்கோட்டை கட்டப்பட்டது. இதுவே பின்பு டச்சுக்காரரால் புதிய முறையில் அமைக்கப்பட்டது.

பண்டைய வன்னியில் வெள்ளாங்குளம் (மன்னார்) என்ற இடத்தில்



ஒரு ஐயனார் கோவில் இருந்ததாக "கோகில சந்தேச" என்ற சிங்கள இலக்கியம் குறிப்பிடுகின்றது. அனுராதபுரத்தில் இருந்து மாதோட்டைக்கும் அங்கிருந்து யாழ்ப்பாணத்திற்கும் செல்லும் பாதை இருந்தது. இது கிழக்கு மூலை தெற்கு என அழைக்கப்பட்டது.

கிழக்கு மூலை என்ற பகுதியில் பல தமிழ் கல்வெட்டுக்கள் கண்டு பிடிக்கப்பட்டன. சரித்திர ஆசிரியர் திரு.லூவிஸ் அபிப்பிராயத்தின்படி வன்னியின் ஆதிகாலக் குடியேற்றங்களில் ஒன்றாக மகாகச்சக்கொடி இருந்தது. வவுனியா அன்று பிரபல்யமாகி இருக்கவில்லை. வன்னியின் இடப் பெயர்கள் மடு, கேணி, ஓடைவில், குளம் என்ற பெயர்களுடன் முடிவடைவது இதன் தனித் தமிழ்த் தன்மையைக் குறிக்கிறது.

முல்லைத்தீவு மாவட்டத்தில் 1888ம் ஆண்டில் வெள்ளி இலச்சினைகள் கண்டெடுக்கப்பட்டன. இந்த இலச்சனையில் பின்வரும் அடையாளங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

(1) சூரியன் (2)நாய் (3) மரம் (4) எருது (5) ஆர்ச் வடிவில் அமைந்த உருவங்கள்.

இவற்றினை ஆராய்ந்த வணக்கத்துக்குரிய பிதாகௌஸ் இப் பொருட்கள் சிந்துவெளியில் மெகஞ்சதாரோ ஹெரப்பாவில் கண்டெடுக் கப்பட்ட பொருட்களை ஒத்ததாக இருந்ததாகக் குறிப்பிடுகின்றார்.

## மகாவம்சம் சொன்ன உண்மை

பாண்டுகாபயன் அனுராதபுரத்தை அரசாட்சி செய்த போது ஜோதிய எனப்பெயர் கொண்ட பிராமணன் பொறியியல் வல்லுநரான இருந்தார். மிகிந்தலையில் கண்டுபிடிக்கப்பட்ட பாறைக் கல்வெட்டு (Rock inscription) பின்வருமாறு குறிப்பிடுகின்றது. விகாரைகளால் மக்களுக்குப் பகிந்தளிக்கப்பட்ட, காணிகளுக்குக் கொடுக்கப்பட்ட தண்ணீரின் அளவு தமிழர்களாலேயே நிர்ணயிக்கப்பட்டது.

## றொபெட் நொக்ஸ் சொன்ன அழியாத உண்மை.

இரண்டாவது ராஜசிங்கன் காலத்தில் சிறைபிடிக்கப்பட்டவரான றொபட்நொக்ஸ் தப்பி ஓடுகையில் கலாவீவா ஊடாக அனுராதபுரத்துக்கு வந்தார். அனுராதபுரத்தில் தமிழ் மக்களே குடியிருந்ததாகவும் அவர்களால் சிங்கள மொழியை விளங்கிக் கொள்ள முடியவில்லை எனவும் கூறியுள்ளார். அத்துடன் கண்டி இராச்சியத்தின் வட எல்லையாக அனுராதபுரம் இருந்ததாகவும் கூறியுள்ளார்.

## தமிழில் உறுதி

17ம் நூற்றாண்டில் குருணாகல் மாவட்டத்தில் எழுதப்பட்ட பெரும் பாலான உறுதிகள் தமிழ் மொழியில் எழுதப்பட்டவையாகவே உள்ளன. ஒரு தமிழ் உறுதியில் எழுதப்பட்ட வாசகங்கள் பின்வருமாறு அமைந் துள்ளன.

**எதிர் மொழி மொழிந்து**
**மறுமொழி பகர்ந்து விற்போம்**
**என்று விற்பதற்கிசைந்து**
**விலையற விற்று பொருளற பற்றி**
**எம்மில் இசைந்து எதிர் மொழி மொழிந்து**
**தம்மில் இருவரும் தாம் சம்மதித்து**
**விற்பதற்கு இசைந்து கொள்வதற்கு வந்து ....**
**தேன்படு காடு மீன் படு பள்ளம்**
**குண்டு குழி உட்பட கல்லும்**
**காவேரியும் புல்லும் பூமி சந்திரன்**
**உள்ளளவும் ஆண்டு அனுபவிக்க**
**சாட்சியை நான் அறிவேன்.**

ஒப்பம்

## வன்னியரசர்கள் பற்றிய வரலாறு.

இந் நூலில் வன்னியரசர்கள் பற்றி சுருக்கமான விளக்கங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் சில வருமாறு.



## கயிலை வன்னியன்

தோமஸ் வான் டச்சுக் கவர்னராக இருந்தவர். (1692 - 1697) இவர் அக்காலத்தில் வன்னியில் அரசாண்ட கயிலை வன்னியன் பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளார்.

"வன்னியரசனாகிய கயிலை வன்னியன் கொம்பனியின் ஆட்சி அதிகார நிலத்தில் சுதந்திரமாகத் திரிகின்றான். நில வாடகை யானைக் கப்பம் திறை என்பவற்றை ஒழுங்காகக் கட்டாது உள்ளான். இவன் பனங்கமத்தில் இருந்து ஆட்சி நடாத்தி வருகின்றான். 12 வருடம் தொடர்ந்து திறை தராது எம்மை ஏமாற்றி வருகின்றான்."

1678ம் ஆண்டில் கயிலை வன்னியன் இறந்த பின்பு டச்சுக்காரர் களைக் கலந்து ஆலோசியாது கயிலை வன்னியனின் உறவின னான காசியனார் வன்னியின் அரசனானான்.( பக் 26 )

## நிற்சிங்க சேனாதிராஜன்

மோயாட் என்ற ஆய்வாளர் பனங்காமத்தில் ஆட்சி செய்த நிற்சிங்க சேனாதிராஜன் 1765ம் இறந்து போக ஆட்சிப் பொறுப்பை அவனது மகள் கற்றிறை நாச்சன் ஏற்றுக் கொண்டதாக எழுதியுள்ளார் பனங்காமத்தில் இவளே ஏக அரசியென்றும் டச்சுக்காரர்களுடன் இவள் நட்புறவை வளர்த்துக் கொண்டதாகவும் இவர் எழுதியுள்ளார்.

18ம் நூற்றாண்டில் மீண்டும் வன்னி மன்னர்கள் அதிக சுதந்திரத் துடன் ஆட்சி நடத்திக் கொண்டிருந்தனர். இது டச்சு அதிகார சபைக்குப் பிடிக்கவில்லை பின்பு ஆட்சி அதிகாரத்திற்கு வந்த நல்லநாச்சி, சின்னநாச்சி ஆகியோர் சரண்அடையுமாறு வற்புறுத்தப்பட்டது.

இது வன்னியில் மக்களிடையே பெரும் கிளர்ச்சியை உண்டு பண்ணி யது. டச்சு அதிகாரத்திற்குச் சார்பான சில அரச ஊழியர்கள் கொல்லப் பட்டனர். கொம்பனிக்காக மரம் வெட்டுவோர் கலைக்கப்பட்டனர் சின்ன நாச்சி தனது இருப்பிடத்தை முல்லைத்தீவுக்கு மாற்றிக் கொண்டாள். நல்லநாச்சி டச்சு அதிகார சபையால் மன்னிக்கப்பட்டு கடைசியில் வண்ணார் பண்ணையில் வாழ்ந்ததாக வரலாறு கூறும்!

## நல்லமாப்பாண வன்னியன்.

பனங்காமத்தில் ஆட்சி நடாத்திய நல்லமாப்பாண வன்னியன் 1790ம் ஆண்டில் சிங்கள வன்னியரின் முறையீட்டால் கைது செய்யப்பட்டான். இவனுக்கு 12000 றிக்ஸ் டொலர் அபராதம் விதிக்கப்பட்டது. அவனது சொந்தமான நிலபுலன்கள் பறித்தெடுக்கப்பட்டு வண்ணார் பண்ணையைச் சேர்ந்த தாமோதரம்பிள்ளை என்பவருக்கு குத்தகையாகக் கொடுக்கப்பட்டது. நல்ல மாப்பாண வன்னியன் சிறையில் இருக்கையில் மனைவியான நல்லநாச்சன் தனது கணவன் மறியலில் இருந்து வெளிவரும் தினம் வரை குளிக்கவில்லை. ஒரு நாளைக்கு ஒரு முறை மாத்திரம் சாப்பிட்டாள். இம் மன்னனின் அபராதத் தொகையினை யாழ்பாணத்து வைத்திலிங்க செட்டியாரே கட்டி முடித்துச் சிறைமீட்டதாக வரலாறு சொல்லுகின்றது. வைத்திலிங்கச் செட்டியாரே வண்ணார்ப்பண்ணைச் சிவன் கோயிலைக் கட்டியவர். நன்றி மறவாத நல்லமாப்பாணன் கோவிலுக்கு வேண்டிய பனைமரங்களை வன்னியில் இருந்து அளித்தான். அது மாத்திரம் அன்றிப் பூநகரியில் உள்ள தரங்கண்டல் பகுதியின் வருமானத்தை அங்கே அக்கோவிலுக்கு அளித்ததாக வரலாறு கூறுகின்றது.

## மறக்க முடியாத பண்டாரவன்னியன்.

பண்டாரவன்னியன் பற்றிச் சில வசனங்கள் கூறினால் அன்றி வன்னியின் சரித்திரம் முழுமையானது ஆகாது. வீரத்துக்கும் துணிவுக்கும் உரிய அரசன் பண்டாரவன்னியன். டச்சுக்காரரையும், பிரிட்டிஷாரையும் எதிர்த்து வாழ்ந்த பெருமைக்கு உரியவன். இவன் ஒரு முறை டச்சுக்காரர் சாயவேர் அனுப்பும்படி கேட்டபோது தரவே முடியாது என மறுத்து விட்டான். முல்லைத்தீவில் நடைபெற்ற சண்டை ஒன்றில் சிங்களப் படைகளின் உதவியுடன் முல்லைத்தீவில் அமைந்திருந்த வன்னியனின் கோட்டையை இவன் தாக்கியதாக் கூறப்படுகிறது. 1785 ஆண்டின் பின் இவனது ஆட்சி தளர்வடைவதைக் காணக்கூடியதாக உள்ளது.

இதற்கு அப்பால் இவனின் வரலாற்று சிறப்பையும் பிரிட்டிஷ் ஆட்சியை இவன் எதித்ததையும் போராடியமையையும் இந்நூல் குறிப்பிடாமையையும் ஒரு சிறிய குறைபாடே!

இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட இந்த சிறிய நூல் மறுபதிப்பு



இன்றி அழியும் நிலையில் உள்ளது. வன்னியின் சரித்திரத்தில் அக்கறை மிகு யாவரும் இந்த நூலை மீண்டும் அச்சிட்டு வெளிக்கொண்டு வர வேண்டும்.



**கிறிஸ்துவுக்கு முன் இலங்கையில் தமிழாட்சி நடைபெற்றதை**

# 7 தெட்டத் தெளிவாக வெளிக்காட்டும் மன்னார் மாதோட்டம்

இலங்கையின் வரலாற்றிலோ மாதோட்டம், திருக்கேதீஸ்வரம் என்பன கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே பிரபல்யமாக இருந்த இடங்களாகும். இவற்றில் மாதோட்டம் 'மாந்தை' என்று சிறப்பிக்கப்பட்டது. திருக்கேதீச்சரம் பாடல் பெற்ற சிவஸ்தலம்! கதிரமலை பள்ளு என்ற பாடல்களிலும் திருக்கேதீஸ்வரம் சிறப்பு மிக்க இடமாகச் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. கி.பி முதலாம் நூற்றாண்டில் பிளினி, தொலமி ஆகியோரால் திருக்கேதீஸ்வரத்தைச் சுற்றியுள்ள இடங்கள் பாலாவி மண்டல நகரம் (Pallavi mundi oppidum) என்ற பெயர்களால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. "மன்னு பாலாவியின் கரை மேல்" எனத் திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் சுட்டிக் காட்டியதைப் போன்றதே தொலமி பிளினி ஆகியோரின் கூற்றுக்களுமாகும். இங்கே பாலாவி மண்டலம் எனக் குறிக்கப் பட்டதைச் சில வரலாற்று ஆசிரியர்கள் பாலாசி மண்டி என வாசித்து (Palasi mundi) இடர்ப்பட்டனர். இதில் இன்னும் சிலர் இத்தொடர் பாலி நூல்கள் சேகரித்து வைக்கும் இடம் என இடர்ப்பட்டுள்ளனர். தமிழ் நாட்டில் இன்றும் மண்டி என்ற சொல் களஞ்சியத்தை குறிக்கவே பயன்படுகின்றது. பாலாவி மண்டி என்பது பல்பொருள் குவியல்களை வியாபார நோக்கத்துக் காகச் சேகரித்து கைக்கப்பட்ட ஒரு இடத்தையே சுட்டிக்காட்டியது.

## மாந்தைப் பள்ளு

நானூறு ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் நாட்டில் வாழ்ந்தவர் மதுரக விராயர். அவரால் இயற்றப்பட்ட நூல் மாந்தைப்பள்ளு என்ற கவிதை நூலாகும். அன்னூலில் மாந்தை நகர் பற்றிய பல குறிப்புகள் காணப் பட்டுள்ளன. "காந்தமுறு தடமதிலும் கமழுமலர்ப் பொழிலுமுற்ற மாந்தை நகர்" என மதுரகவிராயர் பாடிச் சென்றுள்ளார். இந்த நகரத்திலே (மாந்தை) ஒரு காந்தக்கோட்டை இருந்துள்ளது. இருநூறு வருடங்களுக்கு முன்பு தென்னிந்தியாவிலே இயற்றப்பட்ட விசுவபுராணம் என்ற கவிதை நூலில் அதன் ஆசிரியராகிய சிதம்பர கவிராயர்.

**"உத்தர திக்கின் மிக்க ஊசிக் காந்தத்தினாலே**
**சுற்றிலு மகல நாலைந்தோசனை தூரமுள்ள**



**முத்திரை மிகுந்த கோட்டை சிருட்டித்தார் முத்தினத்தில்..........**

எனப் பாடப்பட்டுள்ளது. இப்பாடல்களுக்குச் சிகரம் வைத்தாற் போன்று சீன தேசத்துக் கடலோடி கியூயென்சாங் (Hiuen Tsang) சில தக வல்களை விட்டுச் சென்றுள்ளார்.

## கியூயென்சாங் சொல்வது என்ன?

காந்தக்கோட்டையுள்ள மாந்தை நகரிலே பெண்கள் பலர் இருந் தனர். இங்கு வாழும் ஆண்கள் காந்தக்கோட்டையின் திறத்தினாலே கப்பல்களைப் கரைக்கு வரவழைப்பர். அவ்வாறு வரவழைக்கப்பட்ட கப்பல் கடலில் நிற்க மாலுமிகள் கரைக்கு வருவர். இவர்கள் கரைக்கு வந்த பின்னர் பெண்கள் இவர்கட்கு விருந்துபசாரம் செய்வர். இக்கட்டத்தில் கப்பலில் உள்ள பொருட்களை ஆண்கள் கொள்ளையடித்துச் செல்வர். இதே கருத்துக்கள் Arabian Nights Entertainment என்ற அரபு நூல்களிலும் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. கி.பி 1ம் நூற்றாண்டில் பெரிப் பிளஸ் என்ற கடலோடி காந்தக் கோட்டையை 'சோப்பப்பட்டம' என்ற சொல்லால் (Sopatama) குறிப்பிட்டுள்ளார். 'சோப்பப்பட்டம' என்பது மதிலால் அரண்செய்யப்பட்ட நகர் என்பது கருத்தாகும், என மொழியியல் ஆய் வாளர்கள் கருதுகின்றார்கள். சிலப்பதிகாரத்தில் "சோவரனும் போர் மடியத் தொல் இலங்கை கட்டழித்த சேவகன்" என்ற அடிகள் வருகின்றன (ஆராய்ச்சியர் குரவை) சோவரன் என்ற சொல்லாட்சி பெரிக்கிளிஸின் வாயில் சோப்பட்டம என வழங்கியது எனவும் நிறுவிக் கொள்ளலாம். கி.பி 1ம் நூற்றாண்டில் இவ்விடம் வந்த மேல்நாட்டுக் கடலோடிகள் இவ்விதம் மாந்தையில் காந்தக் கோட்டையும் மக்களும் இருந்த வரலாற்று விடயங்களை நுணுகிக் குறிப்பெடுத்தனர். அவ்வாறெனில் இலங்கையின் வட பகுதியான மாந்தையில் கிறிஸ்து பிறப்பதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழர்கள் ஆட்சி செய்துள்ளார்கள் என்பது விளக்கமான விசயங்கள். பஞ்சகம்மாளரினால் போற்றப்பட்ட யாழ்ப்பாணத்தில் பல நூற்றாண்டுகள் மேடையேற்றப்பட்ட விசுவகர்மா நாடகத்தில்

**"செங்கமல மாலையணிதேவனே**
**மாந்தை நகர்ப்**
**புங்கவனே! காந்தமலைப்**
**பூரண கம்பீர மன்னா"**

எனவரும் கவியடிகள் வாழையடி வாழையாக மாந்தையில் ஒரு மன்னன் ஆட்சி நடாத்தினான் என்பதை தெளிவுபடுத்தம் கவிக்கூற்றாகும். நாடகங் களை வரலாற்று ஆவணங்களாக ஏற்க முடியாவிடினும் இவை வாழையடி வாழையாக வந்த வழி மொழிக்கதைகள் என்பதும் அவை கவிக்கூற்றில் இடம் பிடித்துக் கொண்டன என்பதும் மறைக்க முடியாத விடயங்களாகும்.

## வரலாற்று ஆய்வாளர் வி. குமரசாமி

இலங்கை சுதந்திரம் அடையும் முன்பே தமிழர்களின் வரலாற்றுத் தொன்மை பற்றி ஆராய்ந்தவரான வி.குமாரசாமி பி .ஏ மாந்தை நகரைப் பற்றிப் பின்வருமாறு எழுதியுள்ளார். "மாந்தை அல்லது மாதோட்ட நகரோடு சம்பந்த உரிமை பூண்ட மூவகையினரும் சிவ வழிபாடு உடையவர்களாகக் குறிக்கப்படுகின்றார்கள்.

திருக்கேதீஸ்வர திருநகர் கடல் பெருக்கால் அல்லது வேறு கார ணங்களால் பறங்கியர் இலங்கைக்கு வருமுன்பு அழிந்து திடர் ஆகிற்று அங்கு அழிந்து கிடக்கும் மாளிகைகளும் காலத்திற்கு காலம் கண்டெ டுக்கப்பட்ட நாணயங்களும் தற்காலக் கொழும்பு நகர் போல் பண்டைக் காலத்தில் மாந்தை நகர் விளங்கி வந்திருக்கிறது".
(விசேட ஆராய்சிக் குறிப்புகள் - பக்: அ.அ)

## டி கோற்றா சொல்லும் செய்திகள.

இடிந்து தரைமட்டமாகக் கிடந்த திருக்கேதிஸ்வரச் சுற்றாடலைப் பற்றி சரித்திர ஆசிரியரான டிகொற்றா (De cauto) பின்வருமாறு எழுதி யுள்ளார்.

"இலங்கையின் முற்காலத்தில், உரோமரால் நிர்மாணிக்கப்பட்ட கட்டி டங்கள் இருந்த அடையாளங்கள் இன்றும், காணப்படுதல் முற்காலத் தில் இலங்கைத்தீவுடன் ரோமர்கள் போக்குவரத்து தொடர்புகள் கொண்டி ருந்தனர் என்பதற்கு ஆதாரங்கள் ஆகும். 1585ம் ஆண்டில் ஜோ வோடெ மெல்லோ டெ சா பாயோ மன்னார் பிரதேசத்தில் தளபதியாக இருந்த காலத்தில் தன் அடிமைத்தனத்தை நீக்கிக் கொண்ட அன்னியஸ் பிளக்கா மஸ் என்பவன் மாதோட்டத்தை வெட்டி பரிசோதித்த போது பல நாணயங்



களைக் கண்டெடுத்தார். பல சிப்பந்திகள் ஒரு கட்டிடத்தின் அத்திவாரத்தை புரட்டியபோது நூதனமாகச் செய்யப்பட்ட ஒரு சங்கிலி தென்பட்டது இந்த இரும்புச் சங்கிலி போன்று செய்து தரக்கூடிய ஒரு தொழில் நிபுணன் இந்தியா முழுவதும் தேடியும் அகப்படவில்லை." (T.C.B.R.A.S.VO/20P.83)

## மாந்தை நகர் பற்றித் தமிழ்லக்கியச் செய்திகள்

திருக்கேதீஸ்வரம், மாந்தை என்பன பற்றி தமிழிலக்கியம் பெரும ளவான செய்திகளை விட்டுச் சென்றிருக்கிறது. இலங்கையில் இந்தப் பெருமை திருகோணமலை, மாந்தை ஆகிய நகர்களுக்கே கிடைக்கப் பெற்றுள்ளன.

இராவணனின் மனைவியாகிய மண்டோதரி அவளின் தகப்பனார் மயன் ஆகியோர் மாதோட்ட நகரையே தமது பூர்வீக பூமியாக கைக்கொண்டு வாழ்ந்ததாக தமிழிலக்கியம் கூறுகிறது. மண்டோதரியின் தகப்பனாகிய மயன் இராவணனை சந்தித்து அவனை தனது மருமகனாக்கிக் கொண்ட வரலாற்றினை உத்தர இராமாயணம் சுட்டிக் காட்டியுள்ளது. மண்டோதரி ஒரு சிவபக்தை. இவள் தனது பள்ளி அறையில் சிவனை உருகி பிரார்த்தித்த போது சிவனார் ஒரு பள்ளிபராயத்தினராக அவளுக்கு காட்சி கொடுத்தார்.தான் இருப்பது பள்ளியறை என்பதை மறந்த மண்டோதரி பள்ளிப்பராயத்தினராக வந்த சிவனைத் தோத்தரிக்க தொடங்கி விட்டாள். வார்த்தையாடவும் தலைப்பட்டாள். இதனை செவி மடுத்த இராவணன் பள்ளியறைப் பக்கம் வந்தபோது இறைவன் தன் உருமறைத்துக் குழந்தை யானான். பள்ளியறையில் குழந்தையைக் கண்ட இராவணன் யார் குழந்தை என மண்டோதரியை வினவினான். அவளோ அக்குழந்தை தனது சேடியின் குழந்தை எனக்கூறி நின்றாள். இச்செய்தியினை மணிவாசகப் பெருமான் தனது திருவார்த்தைகளில் அழகாக எடுத்தாண்டுள்ளார். "பெருந்துறை யாதி அந்நாள் உந்து திரைக் கடலைக் கடந்தான் றோங்குமதில் இலங்கைய தனில் பந்தணை மெல்விரலாட்கருளும் பரிசறிவார் எம்பிரானாவாரே." என அழகான சாட்சியினைக் கவிதையில் அமைத்துள்ளார். சிவனார் குழந்தை யாக உருமாறி இருந்தமையைத் திருவெம்பாவை அழகாக சுட்டிக்காட்டு கிறது. "உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கல மென்றங் கப்பழஞ்சொற் புதுக்குமெம் மச்சத்தால்" என்ற அடிகளை மாந்தை நகர் என்றும் மறக்காது.

மாந்தை நகர் பழம் பெரும் புலவரான மாமூலனாரின் அகப்பாட்டிலும் இடம் பிடித்துக்கொண்டது. "நன்னகர் முற்றத் தொன்னார் பண்திறை கொணர்ந்த பாடு செய் நன்கலம்......." என மாந்தை நகரை மாமூலனார் சிறப்பித்தமை வரலாற்று ஆய்வாளருக்கு விருந்து போன்றது.

சூரபன்மன் மனைவி பதுமகோமளை, பதுமகோமளையின் தந்தையாராகிய தேவகம்மியன், குபேரன் மனைவி சித்திரரேகை ஆகியோரின் இருப்பிடம் மாந்தைநகர் என மாந்தைப்பள்ளு என்ற நூல் குறிப்பிடுகின்றது.

## ராகுவும், கேதுவும் மாந்தை நகரும்

தேவர்கள் அமிர்தம் வேண்டித் திருப்பாற் கடலைக் கடைந்தார்கள். இவ்வாறு கடைந்தெடுத்த அமிர்தத்தை அவுணர்கள் காணா வண்ணம் தேவர்கள் மறைவிடத்தில் அருந்தினார்கள். அமிர்தம் அருந்த அவாக் கொண்ட அவுணன் ஒருவன் மறைந்து கொண்டு சூரிய சந்திரர்க்குப் பின்னால் நின்றான்." இவனை அவுணன் என அறியாத தேவர்கள் இவ னுக்கும் அமிர்தத்தை அளித்தார்கள். அவனும் இதனை உட்கொண்டு சாகாவரம் பெற்ற விட்டான். அவன் அமிர்தம் பருகிய பின்பே அவணனின் செயலை சந்திர சூரியர்கள் திருமாலுக்குச் சுட்டிக் காட்டினார்கள். திருமால் ஒரு ஆயுதத்தால் (சட்டுவம்) அவனை வெட்டி வீழ்த்தினார். உடல் வேறு தலை வேறாக வீழ்ந்த அவுணனே இராகு கேதுவாக உயிர் பெற்று வாழத்தொடங்கினான். இராகுவும், கேதுவும் திருக்கேதீஸ்வரம் அடைந்தனர் கடுந்தவம் புரிந்தனர்.

தம்மை காட்டிக் கொடுத்த சூரிய, சந்திரரை இடையிடையே விழுங்கி வருத்தும் வரம் பெற்றனர். இதனைச் சுந்தரமூர்த்தி நாயனார் எடுத்தாண் டுள்ளார்.

"அங்கம் ஒழி அந்நாள் அரவமரர் தொழுதேத்த வங்கம் மலிகின்ற கடல் மாதோட்ட நன்னகரில் பங்கம் செய் பிறைசூடினன் பாலாவியின் கரைமேல் செங்கண்ண சைத்தான் திருக்கேதீச்சரந்தானே"
(சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத்தில் இருந்து)

இலங்கையின் வடபகுதியில் உள்ளது மாந்தை. கி. பி. 1ம் நூற்றாண்டில் தொலமி, பிளினி ஆகியோரால் வரலாற்று நகராக எடுத்தாளப் பட்டுள்ளது. எனவே மாந்தையின் வரலாறு கிறிஸ்துவின் பிறப்புக்கு முற்பட்டது. என்பது தெளிவானது.இத்தகைய புகழை இலங்கையின் வடபகுதியில் பெறுவது மாந்தை நகரே. இங்கே கோட்டை இருந்துள்ளது. மன்னன் ஒருவன் ஆட்சி செய்துள்ளான். இலங்கையின் வடபகுதியில் ஒரு ராச்சியம் கி. பி. 12ம் நூற்றாண்டின் பின்பே உருப்பெற்றது. எனச் சில வரலாறு ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.





# ⑧ பாலஸ்தினியரும் இலங்கைத் தமிழர்களும் ஒரு பன்முகப் பார்வை

மத்திய கிழக்கில் பாலஸ்தீனியரும் தென்கிழக்கு ஆசியாவில் இலங்கைத் தமிழர்களும் சந்தர்ப்பவசத்தால் தமது நல்வாழ்க்கையை இழந்து விட்ட இரு இனங்கள் வந்தவரை வாழ வைத்து அகதிகளாகிவிட்ட இந்த இரு இனங்களும் தம்மைத் தாமே ஆட்சி செய்த இனங்களே! இவர்கள் இன்று உலகம் முழுவதும் அகதிகளாக இருக்கின்றார்கள் என்றால் பாலஸ்தீனியர்களும் தீர்க்கதரிசனமற்ற அரசியற்பாதையிற் தவழ்ந்து வந்ததே காரணம்.

ஆடன் (Auden) என்பவர் ஒரு பாலஸ்தீன கவிஞர் பாலஸ்தீன் மக்களை அவர் பாடுகின்றார்.

"அன்றொருநாள்
எமக்கொரு நாடிருந்தது •
அதை நியாயமானதென
நாம் எண்ணினோம்
உலகப் படத்தைப்
பார்த்திடுவாய்
அதிலே தெரிந்திடுவாய்
அன்புக்குரியவனே!
அங்கு நாம் இப்போது போகமுடியாது

"Once we had a country
and we thought it fair, Look in the atlas and you find it there . Wecannot go there now, my dear we cannot go there now"

இந்த நிலைமை இன்று தமிழ் மக்களுக்குமே. கோட்டையில் தமிழ் அரசர்கள் ஆட்சி செய்ததுண்டு. கண்டியில் கடைசி அரசன் தமிழ் மகன் என்ற பெருமையையும் எமக்குண்டு. அத்துடன் யாழ்ப்பாணமும் வன்னியும் இறைமைமிக்க அரசுகளாக இருந்தன. என்பதற்கு ஆதாரங்களுமுண்டு. பாதியான் என்ற சீன யாத்திரிகன் இலங்கைக்கு வந்த போது புத்தளத்தில் அழகக்கோனார் என்ற தமிழ்ப்பிரதானி அங்கு அரசாண்டதாகக் குறிப்பிட்டுள்ளான். அவனுக்கு ஒரு கண் குருடென்றும் அவன் எழுதி வைத்துள்ளான். சுருங்கச் சொன்னால் இறைமையை இழந்து விட்ட எமது இனமும் தனது



ஒற்றைக்கண் ஒன்றினை இழந்துவிட்ட நிலையிலேயே இருக்கின்றது. இந்த இரு இனங்களும் கடந்த காலத்தில் விட்ட பிழைகள் இறந்தகாலமாகவே இருக்க வேண்டியவை. எதிர்காலத்திற்கு வழிகாட்ட வல்லமை அல்ல. ஹிட்லரின் நாஸிஸ ஆட்சிக்கு முன்பே பாலஸ்தீனத்தில் யூதர்களின் குடியேற்றம் ஆரம்பிக்கப்பட்டு விட்டது. இன்று பாலஸ்தீனத்தில் இருக்கும் பல குடியிருப்புக்கள் பாலஸ்தீனியர்களால் யூதர்கட்கு விற்கப்பட்டவை. பணத்தாசை கொண்டே இந்த நிலங்கள் யூதர்கட்கு விறகப்பட்டவை. ஆயினும் ஹிட்லரின் கெடுபிடியின் பின்பே லட்சக்கணக்கானோர் பாலஸ் தீனத்தில் நுழைந்தார்கள்.

பாலஸ்தீனத்தில் யூதர்களின் குடியேற்றப் புள்ளிவிபரம் பின்வருமாறு..

| ஆண்டு | பாலஸ்தீனத்தில் யூதர் |
|---|---|
| 1920 | 5514 பேர் |
| 1925 | 33,801 " |
| 1934 | 42,359 " |
| 1935 | 61,854 " |

இக் காலகட்டத்தில் 1366518 ஆக இருந்தது. இருப்பினும் கட்டாயக் குடியேற்றத்தின் மூலம் யூதர்கள் நாட்டைப் பிடித்தது மட்டுமன்றி பாலஸ்தீனியர்களை அகதிகளாக்கியும் விட்டனர். இன்று யூதர்களின் குடித்தொகை 15 லட்சத்தைக் கடந்து விட்டது. பாலஸ்தீனியர்களோ மேற்குலக வஞ்சனையால் அகதிகளாகிப் பல நாடுகளுக்கும் சென்று அகதிகள் முகாமிலேயே படுகொலை செய்யப்படுகின்றனர்.

இலங்கைத் தமிழர்களைப் பொறுத்தமட்டில் வடக்கும் கிழக்கும் தமிழர்களின் தாயகம். டொனமூர் அரசியற் திட்டம் 1931ல் கொண்டுவரப்பட்ட போதே இத்தாயகம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. அந்தக் காலகட்டத்தில் 250 சிங்கள மக்களே கிழக்கிலே இருந்தனர். அம்பாறை மாவட்டத்தில் பெரும்பான்மை மக்கள் ஒரு சிலரே இருந்தனர். கிழக்கு மாகாணத்தின் ஒருபகுதியான அம்பாறையில் இக்குடியேற்றம் எவ்வாறு வேகமாகப் பரவியது?

இதன் புள்ளி விபரம் இதோ

| | 1971 | 1981 | அதிகரிப்புவீதம் |
|---|---|---|---|
| சிங்களவர் | 82,280 | 1,46,371 | 778% |

| | | | |
|---|---|---|---|
| தமிழ்பேசும் | | | |
| முஸ்லிம்கள் | 1.27,308 | 1,61,754 | 27% |
| தமிழர்கள் | 62,296 | 78,315 | 25% |

1947ம் ஆண்டில் 1984 பேராக இருந்த சிங்கள மக்கள் இன்று குடித் தொகையில் முஸ்லிம் குடிசனத் தொகைக்குச் சமமாக வளர்ந்து தமிழ் மக்களை மூன்றாம் இடத்திற்குத் தள்ளியுள்ளார்கள்.

அம்பாறையை விட்டு திருகோணமலையை உதாரணத்திற்கு எடுப்போம். அங்கு சிங்கள மக்கள் குடியேறிய போது அவர்களிடம் அதிக பணம் பெற்றுக் கொண்டு தமிழ் மக்கள் தமது வீடுகளை அவர்கட்கு விற்றுள்ளார்கள். இது பாலஸ்தீன மக்கள் பணத்திற்காக தமது நிலங்களை யூதர்கட்கு விற்றதையே நினைப்பூட்டும்.

வட்டமேசை மகாநாடு கூட்டி ஏமாற்றப்பட்டவர்களில் பாலஸ்தீனியரும் தமிழர்களும் முக்கியமானவர்கள், யூதர்களின் குடிசனம் அதிகரிக்கவே 1936ல் இனக் கலவரம் ஆரம்பமானது. பாலஸ்தீனத்திலே பல யூதர்கள் படுகொலை செய்யப்பட்டார்கள். இப்படுகொலைகள் நடந்த போது பாலஸ்தீனத்தில் செல்வாக்குப் பெற்ற தலைவர் மப்டி (mufti) இக்லவரத்தை முடிவுக்குக் கொண்டு வர லண்டனில் 1938ம் ஆண்டு ஒரு வட்ட மேசை மாநாடு கூடியது. இதில் பாலஸ்தீன நாடு பிரிட்டிஸ், யூத, பாலஸ்தீனம் என்ற மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட யோசனை சொல்லப்பட்டது. ஆயினும் அரபு உலகத்தின் செல்வாக்கு அதை முறியடித்தது. 1982ம் ஆண்டு இலங்கைத் தமிழர் பிரச்சனையை முடிவுக்குக் கொண்டு வர ஒரு வட்டமேசை மகாநாடு கொழும்பில் கூடியது அது முடிவு எதுவுமற்ற கிழவிகள் மகாநாடாக கலைந்தது.

பலகட்சிகளை அமைத்து ஆளுக்கொரு மேடை அமைத்தவர்களிலும் இரு இனங்களும் சளைத்தவர்களல்ல. 1930ல் பாலஸ்தீனத்தில் ஆறு கட்சிகள் இருந்தன. அதில் முக்கியமானது மப்டிக் கட்சி (Mufti~ Party) இதன் தலைவரே மப்டி. இக்கட்சிகள் மூர்க்கத்தனமாக ஒன்றையொன்று எதிர்த்தன. மப்டி 1936 இனக்கலவரத்தில் தலைமறைவானது. தேசிய பாதுகாப்புக்கட்சி (National Defence Party) பலம் பெற்றது. இதன் தலைவர் றகேப்பே நாசாசிபி (Raghep Bey Nashashibi) இவர் ஒரு மிதவாதி



காலத்தைக் கட்டுவதில் நியாயவாதிகளை மிஞ்சியவர். ஜெருசலேசத்தின் மேயராக பதினைந்து வருடம் பதவி வகித்தவர். இவரின் ஒற்றுமையின்மை யூதர்களின் ஆக்கிரமிப்புக் குடியேற்றத்தை வளர்ப்பதற்கு காரணமானது.

இலங்கையின் பெரும்பான்மை திட்டமிட்ட குடியேற்ற காலத்தில் இலங்கைத் தமிழர்கள் பல கட்சிகளாகப் பிளவுபட்டு ஆளுக்கொரு கொடி பிடித்தனர் என்பதனை மறுக்க முடியாது.

பலஸ்தீனத்தில் "Jaffa" என்று ஒரு இடம் இருக்கிறது. இந்த இடத்திற்கே உலகிலுள்ள யூதர்கள் எல்லாம் முதலில் அகதிகளாக வந்தார்கள். வந்தவர்கள் எல்லோருமே திறமைசாலிகள். இப்பொழுது அவர்களின் பிற்சந்ததியினர் சிலர் மொசாட்டுக்களாக Jaffnaவில் இருப்பதாக சொல்லப்டுகிறது. Jaffa.....வில் இருந்து jaffnaவிற்கு இவர்களின் வருகை நல்ல மாற்றமல்லவென அரசியல் அவதானிகள் கருதுகின்றார்கள்.



# (9) தமிழரின் வரலாற்றை ஆவணப்படுத்திய முதலியார் இராசநாயகம்

இலங்கை தமிழ் மக்களின் வரலாற்று ஆவணங்கள் இன்று முழுமையாக பாதுகாக்கப்படவில்லை. தொல் பொருள் திணைக்களம், சுவடிக் கூடத் திணைக்களம், தேசிய நூலகம் இவற்றிலே பெரும் தொகையான வரலாற்று ஆவணங்கள் இருப்பினும் இவைபற்றிய சரியான விளக்கங்கள் எவையும் பொது மக்கள் முன்பு வைக்கப்படவில்லை. இந்நிலையில் இலங்கையில் தமிழ் மக்களின் வரலாற்றிக்கு எழுத்து வடிவில் வழிகாட்டிய முதலியார் இராசநாயகம் பற்றியும் அவர் எழுதிய பல நூல்கள் பற்றியும் இன்றைய காலகட்டத்தில் ஆய்வு செய்வதுவும் அவசியமானது.

## பூர்வீகம்

முதலியார் ராசநாயகம் யாழ்ப்பாணத்தில் நவாலியூரில் பிறந்தவர். வீரசிங்க உடையாரின் வழித்தோன்றலில் உதித்த செல்லப்பாப்பிள்ளையின் புத்திரர். 1870ம் ஆண்டிலே தோன்றிய முதலியார். இராசநாயகம் கொழும்பு சென்ற் தோமஸ் கல்லூரியின் மாணவன். நீதிமன்றத்தில் மொழி பெயர்ப்பாளராகக் கடமையாற்றிய முதலியார் ராசநாயகம் தனது இறுதிக்காலத்தில் சிவில் சேவிஸ் அதிகாரியாகக் கடமையாற்றினார். இக்காலத்தில்தான் தமிழர் சரித்திரத்திற்கு உயிர் ஊட்டவேண்டும் என்ற எண்ணம் இவருக்கு உண்டாயிற்று. இவருடைய தமிழ் ஆங்கில அறிவு மிகவும் திறமையாக விளங்கியதால்தான் இந்து சாதன பத்திரிகாசிரியரான திரு.வே திருஞானசம்பந்தப்பிள்ளை. அயோத்தியா காண்டம் என்ற நூலை முதலியார் இராசநாயகம் அவர்கட்கு அர்ப்பணம் செய்திருக்கின்றார்.

## நூற்பெயர் அகராதி

தமிழர் சரித்திரத்தின் பால் சில தரவுகளை நிறுவும் பொருட்டு முதலியார் 1929ம் ஆண்டில் இங்கிலாந்து உட்பட அதிகளவான ஐரோப்பிய நாடுகட்குப் பிரயாணம் செய்துள்ளார். தமிழில் முதலில் நூற்பெயர் அகராதி ஒன்று வெளிவருவதற்கு உழைத்தவர் முதலியாரே.இந்த அகராதியில் தமிழில்



இதுவரை வெளிவந்த நூல்களின் பெயர்கள், ஆக்கியோன் பெயர்கள் யாவும் செவ்வையாக இடம் பெற்று இருந்தன. சுமார் முப்பதாயிரம் நூல்களின் பட்டியல் இதில் இடம் பெற்றிருந்தது. சென்னை நூல் நிலையக் கழகத்தார் கேட்டுக்கொண்டதற்கிணங்க முதலியார் இந்த அகராதியை அங்கு அனுப்பி வைத்தார். சென்னையில் இருந்து வெளிவந்த நூற்பெயர் அகராதி முதலியார் இராசநாயகத்தின் சேவையை அடிப்படையாகக் கொண்டது.

## பண்டைய யாழ்ப்பாணம்

பண்டைய யாழ்ப்பாணம் எனப் பெயரிடப்பட்டு முதலியார் ராசநாயகத்தால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட சரித்திர நூல் இத் துறையில் ஒரு முன்னோடி முயற்சி எனலாம். இந்நூல் தமிழ் மக்களின் எழுச்சியையும் வரலாற்றையும் மிகைப்படக்கூறும் ஒன்றென சில ஆய்வாளர்களால் குறிப்பிடப்படுகிறது. ஆயினும் தமிழர் சரித்திரத்தில் இது ஒரு முன்னோடி முயற்சி என்பதில் எதவித ஐயமும் இல்லை. இந்த நூலை எழுதுவதற்கு வரலாற்று ஆசிரியர்கள் கொட்றிங்ரன் தொடர்புகளும் ஏற்பட்டிருக்கலாம் எனச் சுட்டிக் காட்டப்படுகின்றது.

## கூழங்கைச் சக்கரவர்த்தி

யாழ்ப்பாண சரித்திரத்தில் உண்மை என நம்பப்பட்டு வந்த சில குருட்டு நம்பிக்கைகட்கு முதலியார் ஆப்பு வைத்தார். யாழ்ப்பாண சரித்திரத்தில் கூழங்கை சக்கரவர்த்தியின் பங்கு உள்ளது. இப்பெயருக்கு அளவில் குறைந்த கைகளையுடையவன் என்றே பொருள் விளங்கப்பட்டது. அனால் இப்பதம் காலிங்கச் சக்கரவர்த்தி என்றே அவரால் நிறுவப்பட்டது. காலிங்கசக்கரவர்த்தி என்ற பதம் கூழங்கை சக்கரவர்த்தி என மாறும் தன்மையுடையது. காலிங்கசக்கரவர்த்திகள் ஆட்சி யாழ்ப்பாணத்திலும் சிங்களப்பிரதேசங்களிலும் நடைபெற்றே இருக்கின்றது. தாம் ஆட்சி நடத்திய இடங்கள் எல்லாவற்றிலும் இவர்கள் 'சிங்க' என்று தொடங்கும் பெயர்களை இட்டிருக்கின்றார்கள். 'சிங்கப்பூர்' என்ற பெயர் முதலில் காலிங்க சக்கரவர்த்திகளால் 'சிங்கப்பூர்' என இடப்பட்டதாக முதலியார் கருதுகின்றார். காலிங்க நாட்டரசர்களின் தலைநகர் 'சிங்கப்பரம்' எனப்படும். இக் கொள்கை சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற நூல்களிலும் காணப்படுகிறது. யாழ்ப்பாணத்தில் சிங்கை நகர் எனபெயரிடப்பட்ட ஒரு நகரும் சிங்கையாரியன் என ஒரு அரசன் இங்கு இருந்ததையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

இவ்வாறு சுட்டப்படும் ஆரியர்கள் தமிழர்களாகப் பரிணமித்துள்ளார்கள் என்பதுவும் வரலாற்று ஆசிரியரின் ஆய்வாகும்.

யாழ்ப்பாணகந்தரோடையில் முதலில் செய்யப்பட்ட தொல்பொருள் ஆய்வுகள் முதலியாராலும் பவுல் பீரிஸ் அவர்களாலும் செய்யப்பட்ட முதல் முயற்சிகளாகும்.

கொழும்பு தொல்பொருட் காட்சிச்சாலை ஆரம்பிக்கப்பட்ட காலத்தில் அதன் மேற்பார்வையாளர் குழுவின் அங்கத்தவராகச் செயற்பட்டவர் முதலியார் அவர்களாவார். தொல் பொருட்காட்சிச்சாலையில் தமிழர் வர லாற்று மரபு நன்கு பேணப்படவேண்டும் என்பதில் முதலியார் மிக அக்கறை யாக இருந்தார். எனவே தமிழ் மக்களின் வரலாறு திரிபுநிலையை அடையக் கூடாது என்பதற்காகப் பல கட்டுரைகளையும் பல நூல்களையும் அவர் எழுதியுள்ளார். இக்கட்டுரைகளும், நூல்களும் மீண்டும் புதுப்பிக்கப்படா விடின் தமிழர் வரலாற்றிக்கு இவை பெரும் நட்டமாக இருக்கும் என்பதில் ஐயத்திற்கு இடமில்லை. முதலியாரால் வெளியிடப்பட்ட சில முக்கிய வரலாற்றுக் கட்டுரைகள் கீழே தரப்படுகின்றன.

**1.Note on 'nagadipa' R.A.S journal vol xxvi N o 70.**
**2. Vijayabahu inscription pollanaruwa ibid vol x no 77.**
**3.The Tamil kingdom 08 jaffna and the early Greek writings.**
**4.The origin of pallavas.**
**5. The alogeswara period ( ceylon literary journal)**

## நூல்கள்

இவர் வெளியிட்ட நூல்கள் மிகவும் போற்றி பாதுகாக்கப்பட வேண்டியது "Tamil Document in the Archives" என்ற நூலாகும். இந்த நூலுடன் 'KATARAGAMA' என்ற ஆங்கில நூலும் (1930) தமிழில் எழுதப்பட்ட "யாழ்ப்பாண சரித்திரம்" (1933) ஆங்கிலேயர்காலம் (1934) என்பனவும் இன்று அழிந்து போகும் நிலையில் உள்ளன. இந்த நூல்கள் மீண்டும் வெளிவரின்தமிழர் சரித்திரத்தில் ஒரு மையில் கல்லாக அமையும் என்பதில் ஐயம் இல்லை.

## சுவாமி ஞானப்பிரகாசரும் முதலியாரும்.

சேது என்று பொறிக்கப்பட்டிருக்கும் நாணயங்கள் யாழ்ப்பாண அரசகால நாணயங்கள் என்றும் அது ஒரு தேசிய இனத்தின் அடையாளம் என்றும் முதல் முதலில் சுட்டிக்காட்டியவர் முதலியாரே! இந்தக்கருத்து பின்பு சரியாக நிறுவப்பட்டதாக சுவாமி ஞானபிரகாசர் சுட்டிக்காட்டியுள்ளார்.

(Ceylon Antiquary vol v part IV)

தமிழர் வரலாற்றிக்கு உரமளிக்கும் ஆய்வாலர்கள் இவரின் நூல்களை வெளியிட முன்வரவேண்டும்.



# 10 தமிழில் ஆங்கில ஆதிக்கம் ஏற்படுத்தும் பாதிப்பு

ஒரு மொழி பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் இடையே அதிக வேறுபாடுகளைக் கொண்டிருக்கக்கூடாது. அவ்வாறு இருக்குமாயின் சர்வதேச ரீதியில் அது வளர்ச்சியடைவது சுலபம் அல்ல. தமிழ் மொழி தற்போது தனது தனித்தன்மையை இழந்து வருவதை அவதானிக்கக் கூடியதாக உள்ளது. சொற்களின் கேலிக்கூத்தான உருமாற்றம் ஆங்கிலத்தின் தேவையற்ற பதங்களை தேவையற்ற இடங்களில் ஏற்றுக் கொள்ளல் என்பன தமிழ் மொழியின் இன்றைய நிலைக்கு பிரதான காரணங்கள் ஆகும். பின்வரும் பகுதி கலைஞர் கருணாநிதியின் 'பண்டார வன்னியன்' என்ற நூலில் இருந்து எடுக்கப்பட்டது அவ்வசனம் வருமாறு:-

கால மாறுதலில் காக்கை வன்னியன் போன்ற சிலரது உள்ளங்களில் தன்னலம் என்னும் கரையான் புற்றெடுத்து அங்கு துரோகம் என்னும் கருநாகமும் குடியேறிவிட்டது. இங்கு கறையான்என்பது கரையான் என திரிபடைந்து நிற்பதைக்காணலாம். இப்பெயர்ச் சொற்கள் மாத்திரம் அன்றி வினைச்சொற்களும் தனது நிலையை இலக்கண வழுக்களாக ஏற்கும் தடுமாற்ற நிலை ஏற்பட்டு வருகிறது. அவற்றில் சில வருமாறு.

| | | |
|---|---|---|
| வெறுத்தல் | - | வெருத்தல் |
| பொரித்தல் | - | பொறித்தல் |
| வறுத்தல் | - | வருத்தல் |
| நிறுத்தல் | - | நிருத்தல் |
| பறைதல் | - | பரைதல் |

வினையடிகளில் இருக்கும் பிழைகள் தமிழ்மொழியின் ஒருமைப் பாட்டினைக் குலைக்கும் வல்லமை வாய்ந்தமை. அக்கறை என்ற சொல் அக்கரை என் பயன்படுத்தப்பட்டு வருகிறது தமிழில் நாம் காட்டும் அக்கறை இவ்வளவு தூரம் வீழ்ச்சியடைந்து உள்ளது குறிப்பிடத்தக்கது.



## ஆங்கிலத்தின் ஆதிக்கம்.

ஆங்கில மொழியின் ஆதிக்கம் அதிக அளவில் தேவையற்று ஊடுருவ ஆரம்பித்துள்ளது. தமிழில் ஒயில் என்ற சொல்லாட்சி உண்டு. அது அழகினைக் குறித்து நிற்கும். ஆங்கிலத்தில் உள்ள Oil இப்போது ஒயில் என்ற சொல்லின் அர்த்தத்தை விழுங்கிவிட்டது இவ்வாறு மெயில், ரயில் ,கொயில், பெயில் என்ற சொற்கள் தமிழோடு தமிழாக கலந்து நிற்கின்றன. இத்தாக் கங்கள் இம்மட்டோடு அடங்கி விடவில்லை

## வேறு உதாரணங்கள்

ஒரு மொழி விருத்தியடையும் போது அம்மொழியானது கலைச் சொற்களில் பெரும் எண்ணிக்கையை அடைய முடியாது. கடவுள் என்ற சொல் அதிக பாவனையில் இல்லாமையினால் வள்ளுவன் உலகியற்றி னான் என்ற பதத்தைப் பயன்படுத்தினார். தராசு என்ற சொல் பாவனைக்கு வராமையால் 'சமன் செய்து சீர்தூக்கும் கோல்' என்ற பெரும் கலைச் சொல்லை அவர் பயன்படுத்த நேர்ந்தது. மகாகவி பாரதியார் காஞ்சி நகர்ப் புலவர் செய்யும் உரைகளை இன்னோர் இடத்தில் கேட்க ஒரு கருவி செய்வோம் எனக் கூறினார். வானொலி என்ற பதத்தைக் கூட அவரால் தர முடியவில்லை. விஞ்ஞான முன்னேற்றங்களால் தமிழில் மேல்நாட்டுச் சொற்களின் தாக்கங்கள் தவிர்க்க முடியாதவை. ஆனால் அவை வழக்கில் உள்ள சொற்களை வீழ்த்தி விடல் பெரும் பரிதாபம் சவுக்கண் என்ற சொல்லை விறாந்தை என்ற போத்துக்கேயச் சொல் வழக்கில் இருந்து அழித்தது. ஆலையை மில் ஒழித்தது ஹலோ வந்தது தொலைபேசியுடன், கிலோ வந்தது முகத்தல் அளவையுடன்

ஒரு சைக்கிளுடன் றிம், டிம், வால்ரியூப் ,பார், செயின், மக்காட்......... என தமிழக்கு வந்த சொற்கள் ஏராளம். கார் ரயில் விமானம் போர்முனை தளவாடங்கள் என்பன மூலம் நூற்றுக்கணக்கான வேற்று மொழிச்சொற்கள் தமிழில் இடம் பிடித்தன. பகுபதம் பாகபதம் என்ற இலக்கண மரபினை இச்சொற்கள் உடைப்பனவாக அமைந்தன.

## சொற்களும் மொழிகளும்

ஒரு மொழியின் சொற்கள் காலத்திற்கு காலம் அர்த்தங்கள் மாறி வருவது இயற்கைதான். உதாரணமாக 'Curfew 'என்ற ஆங்கிலச் சொல் முதல் முதலாக ''மணியினை அடித்தல்'' கருத்திலேயே உபயோகிக்கப்பட்டது. Academy என்ற சொல் இன்னும் சுவாரசியமானது. பிளாட்டோ என்ற தத்தவ அறிஞர் பிள்ளைகட்குப் பாடம் சொல்லிக் கொடுத்த இடமே Academy. இது இப்போது கல்வியைப் போதிக்கும் இடமாக மாறி நின்றது. முன்பு கேக்கைக் குறிப்பதற்கு 'பிஸ்கட்' என்ற ஆங்கிலச் சொல் பயன்பட்டது. இப்போது அர்த்தம் வேறாகி விட்டது. அது போன்று மணமகன் என்ற சொல்லைக் குறிக்கும் Bridegroom என்ற சொல் ஆங்கிலத்தில் மாப்பிள்ளையின் தோழனையே முதலில் குறித்தது. தமிழில் 'நாற்றம்' என்ற சொல் கம்பர் காலத்தில் 'நறுமணத்தைக்' குறித்து இப்போது 'துர்நாற்றத்தைக்' குறிக்கிறது. இதுகால ஓட்டத்தின் மாறுதல் என எடுத்துக்கொள்ளலாம். ஆனால் தமிழில் இருக்கும் அந்த அர்த்த மாறுதல்கள் ஆங்கிலமொழியூடாகத் தமிழ் வடிவம் பெற்று தமிழின் இளமையைக் குலைக்கின்றன.இரண்டாவதாக தமிழ் நாட்டுத் தமிழுக்கும் அயல் நாட்டுத் தமிழுக்கும் இடையில் பாரிய வேற்றுமைகள் உண்டாகி வருகின்றன. உதாரணமாக Guideஎன்ற சொல்லை எடுத்துக் கொள்வோம். வழிகாட்டி என்ற சுலபமாகச் சொல்லக் கூடிய இச்சொல்லுக்கு 'கைட்' தமிழ்படுத்தும் அறியாமையை என்ன என்று சொல்வது? இவ்வாறு ஆங்கிலத்தில் இருந்து தமிழுக்கு வந்த தமிழ் உருவம் பெற்று விட்ட சில ஆங்கிலச் சொற்கள் வருமாறு.

இங்கு - Ink கவரு - Cover மில்க்கு - Milk பாறஸ்ற்- Forest றைஸ் - Rice காரு - car லாறி - Lorry வாச்சு - watch புக்கு - Book செக்கு - cheque பாங்கு - Bank.

இவ்வாறு ஆங்கில வடிவத்தில் தமிழ் வளர்ந்து வருவது தமிழுக்கு நல்ல மாற்றம் அல்ல என்பதை தமிழ் மக்கள் புரிதல் வேண்டும். தமிழ் நாட்டில் சர்க்கரையை சீனி என்றும் சீனியை சர்க்கரை என்றும் கூறுகின்றனர். அமெரிக்க ஆங்கிலத்தில் "Pavement "றோட் என்ற கருத்தில் வழங்கி வருவதும் Road என்ற சொல் அமெரிக்கன் ஆங்கிலத்தில் pavement ஆக பயன்படுத்தப்படும் இடைவெளி தமிழில் ஏற்பட்டு வருவது வேதனைக் குரியது.



கூட்டுறவுக் கடை என அழகான பதம் தமிழில் இருக்க கோ-ஆப் டெக்ஸ் என்ற ஆங்கிலப்பதம் எதற்கு? இம்பீச்மெண்ட் (Impeachment) என்ற ஆங்கிலப்பதத்திற்கு "பழிமாட்டறைவு" என்ற அழகான தமிழ்ப்பதம் உண்டு. ஆனாலும் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் எந்தத் தமிழ் ஏடும் இந்தச்சொல்லைப் பாவனையில் கொண்டு வரவில்லை. மல்யுத்தக்கோதாவை முரண்களரி என்ற சொல்லால் பண்டைய தமிழகத் தில் குறித்தனர். ஆனால் அச்சொற்களோ சீண்டப்படாது மூலையில் உள்ளன. இது ஒருபுறமிருக்க தமிழ் உருவம் பெறாத பல சொற்கள் சினிமா விளையாட்ட இயந்திரத் தொழில்கள் என்பனவற்றின் மூலம் தமிழ் மொழியில் நிறைகின்றன. இவற்றின்மூலம் தமிழ் என ஒருமொழி உண்டா என யோசிக்கும் ண்ணமே காலப்போக்கில் தோன்றும்.

## இயந்திரம் விழுத்திய தமிழ்

இயந்திரங்கள் பாவனைக்கு வந்த பின்னர் தமிழில் ஆயிரக் கணக்கான சொற்கள் ஆங்கிலத்தினூடாக ஆங்கில உருவில் தமிழ் உருவம் பெற்றன இவற்றில். ஒரு சொல்லாவது தமிழ் உருவம் பெற வில்லை. கியர், வைண்டிங், றீவைண்டிங், கொயில், காஸ்கட், போறிங், கிறைண்டிங் போன்ற பெயர் வினைச்சொற்களே தமிழுருவம் பெறாது தூரத்தில் நிற்பதை கவனிக்க முடியும் விளையாட்டில் வழங்கப்பெறும் செமிபைனல், குவாட்டர் பைனல் போன்ற சொற்கள் கூட ஆஅங்கிலப் பாணியில் தமிழில் புகுந்து விட்டன கால் இறுதி ஆட்டம் என்று எழுது வதற்குக் கூடத் தமிழ் உலகம் விரும்புவது இல்லை.

## சினிமாதந்த கலப்படத் தமிழ்

இருபதாம் நூற்றாண்டில் சினிமாத்துறையின் வரவு ஆங்கில ரூபத்தில் பல தமிழ்ச்சொற்களைத் தமிழுக்கு தந்த விட்டது. அச்சொற்கள் நூற்றுக் கணக்கானவை. டைரக்ஷன், ஹீரோ, ஸ்ருடியோ, டயலொக், ஜோக், புறடியூசர், றைற்றர், மேக்கப்மேன், கமராமேன், கால்ஷீற்...... இவ்வாறு இவை விரிந்து செல்லும்.

பல்துறைகளில் ஆயிரக்கணக்காக நுழைந்து வரும் ஆங்கிலத்தை கட்டுப்படுத்தாவிட்டால் 21 ஆம் நூற்றாண்டில் ஒரு கலப்பு தமிழையே சந்திக்கவேண்டி வரும்.

# (11) மறு மதிப்பீடு செய்யவேண்டிய மாபெரும் தமிழ் அறிஞன் ஆ.முத்துத்தம்பிப்பிள்ளை

தமிழ் இலக்கியங்களை வளர்ப்பதற்காக யாழ்ப்பாணத்தில் இருந்து தமிழ்நாட்டிற்குச் சென்றோர் அநேகர். இத்துறையில் முன்னோடிகள் இலங்கைத் தமிழ் அறிஞர்களே. சி.வை.தாமோதரம்பிள்ளை தொடங்கி சமீபத்தில் காலம் சென்ற பேராசிரியர் க. கைலாசபதி வரை இந்த வரைவிலக்கணத்தில் இருந்து தப்ப முடியாது. ஈழத்துப் பூதந்தேவன் தொடங்கி இன்றைய இளம் இலங்கை எழுத்தாளர்கள் வரை அதிகம் பேசப்பட்டு வருகின்ற போதும் அரிய பல சாதனைகளைச் சோதனைகள் மத்தியிலும் எழுதி வெளியிட்ட மானிப்பாயின் தவப்புதல்வன் ஆ. முத்துத் தம்பிப்பிள்ளை பற்றி ஆய்வாளர்கள் அதிகம் ஆராய்ச்சி செய்யவில்லை. இது துர்லபமானது. அவரைப்பற்றி முழுமதிப்பீடுகள் செய்யப்பட வேண்டும்.

1858 ஆம் ஆண்டு இந்தியாவின் முதல் சுதந்திரப் போராட்டம் இராணுவத்திடையே வெடித்தது. மங்கள பாண்டே என்ற முதல் பிராமணன் சுதந்திரத்திற்காகத் தன் உயிரை விட்ட பெருமை அந்த ஆண்டிற்கே உண்டு. அன்றே தமிழுலகின் விடிவெள்ளி. ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை மானிப்பாயில் உதயமானார். இவரின் தகப்பனார் பெயர் ஆறுமுகம் பிள்ளை. இளம் வயதில் எஸ். பி. பேஜ் அவர்களின் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் கல்வி கற்ற அவர் பின்பு தனது ஆங்கிலக்கல்வியை வெஸ்லியன் சென்றல் கல்லூரியில் (யாழ்ப்பாண மத்திய கல்லூரி இன்று) பெற்றார்

## தமிழ்நாடு பயணம்

ஆங்கிலம் தமிழ் ஆகிய இரண்டையும் அழகுறப் பயின்ற ஆ. முத்துதம்பிப்பிள்ளையின் திறமையை அறிந்து தமிழகம் வா வா என வரவேற்றது. 1880ம் ஆண்டு தனது இருபத்து இரண்டாவது வயதிலேயே தமிழ் நாட்டில் காலடி எடுத்து வைத்தார்.

தமிழகத்தில் அக்காலத்தில் மிகவும் புகழுற வாழ்ந்து வந்த



பணக்காரர்களில் முக்கியமானவர் திருத்துறைப் பூண்டி ஜில்லாவில் வாழ்ந்து வந்த அழகியநாதன் செட்டி என்பவர். ஆ. முத்துத்தம்பிப்பிள்ளையின் திறமை அறிந்து அவரின் கீழ் தனது பிள்ளைகள் படிக்க வேண்டும் என்ற அவாவினால் பிள்ளைகளை அவரின் மாணவர்கள் ஆக்கினார்.

ஆனால் எழுத்து வேந்தன் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளைக்கு ஆசிரியர் வேலை அதிக நாள் நின்று பிடிக்கவில்லை

அங்கிருந்து அவர் 1884ல் காரைக்கால்சென்றார். அங்கே அக்காலத்தில் மிகப்பெரும் பத்திரிகை ஆசிரியராகக் கடமையாற்றிய தேவாசிமுத்து நாடன் என்பவரின் வரவேற்பு அவருக்குக் கிடைத்தது. அவர் நடாத்தி வந்த சத்தியபிரனி என்ற பத்திரிகையின் ஆசிரியராகும் வாய்ப்பு முத்துத்தம் பிப்பிள்ளைக்குக் கிடைத்தது. இந்திய மக்களின் சுதந்திரத் துக்காக ஆக்கிரோசமாகப் பேனா தூக்கிய முத்துத்தம்பிப்பிள்ளையை பிரிட்டிஷ் நிர்வாகம் சிறையில் அடைத்தது.

1885ல் சிறையில் இருந்து விடுபட்ட ஆ. முத்துதம்பிப்பிள்ளையை அறிஞர் உலகம் வரவேற்றது. தேவாசி நாடன் அவர்களால் ஒரு தொகை பணம் முத்துத்தம்பிப்பிள்ளைக்கு வழங்கப்பட்டது. அந்த நிதியினால் சென்னையில் அதே வருடம் அன்டர்சன் வீதியில் யூபிலி அச்சகம் என்ற பெயரில் ஓர் அச்சகம் தொடங்கியது. இந்த அச்சகம் பல நூல்களைத் தமிழில் வெளியிட்டது. அதில் ஒன்று முத்துத்தம்பிப்பிள்ளையால் வெளியிடப்பட்ட காளிதாசன் சரித்திரம், சம்ஸ்கிருதத்தில் இருந்து ஆங்கிலத்திற்கு மொழி பெயர்க்கப்பட்ட இந்நூல் பல பதிப்புக்களைக் கண்டு அமோக வெற்றியீட்டியது. அதைத் தொடர்ந்து சென்னையில் இயங்கி வந்த இயற்கை விஞ்ஞான வரலாற்று நிறுவனம் இவரை ஒரு கௌரவ அங்கத்தவராக ஏற்றுக் கொண்டது.

## முத்துத்தம்பிப்பிள்ளை யாழ்ப்பாணம் திரும்புகின்றார்.

முத்துத்தம்பிப்பிள்ளை யாழ்ப்பாணம் திரும்பிய காலம் வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒன்று. ஆங்கில மோகம் எங்கும் தலை விரித்தாடத் தொடங்கியது. அதில் யாழ்ப்பாணம் பற்றிச் சொல்லவே தேவையில்லை. தமிழ் பற்றிச் சிந்தித்தும் ஆராய்ந்தும், பதிப்பித்தும் வெளியிட்ட சி.வை. தாமோதரம்பிள்ளை ஓய்வு பெற்று விட்டார்.

மற்றும் தமிழின் மறுமலர்ச்சிக்காக உழைத்த கறோல் விசுவநாதப்

பிள்ளை, நெவின்ஸ் சிதம்பரப்பிள்ளை என்போரும் இவரது உறவினரும் மிகப் பெரும் தமிழறிஞர்களில் ஒருவருமான ஆர்னோல்ட்டும் இயற்கை எய்திவிட்டனர். இந்நிலையிலேயே தனி ஒருவனாக நின்று தமிழுக்குப் புத்துயிர் ஊட்டப் புறப்பட்டார் ஆ. முத்துத்தம்பிப்பிள்ளை.

## நாவலர் கோட்டத்தின் தந்தை

1893ல் நாவலர் பெருமான் வாழ்ந்த வீட்டை விலைக்கு வாங்கிய பெருமை முத்துத்தம்பிப்பிள்ளைக்கே, அந்த நாளில் அங்கு முத்துத்தம்பிப் பிள்ளையால் தொடங்கப்பட்ட அச்சகமே நாவலர் கோட்டம். இன்று நாவலர் அச்சகமாக விளங்குவது நாவலர் கோட்டத்தின் தொடர்ச்சியே.

இந்த அச்சகத்தின் மூலம் தனி ஒரு மனிதனாக நின்றமுத்துத்தம் பிப்பிள்ளை பல நூல்களைத் தமிழுலகத்திற்குத் தந்து இருக்கின்றார். நாவலர் அச்சகம் மூலமாக முத்துத்தம்பிப்பிள்ளை அவர்கள் பதிப்பித்த அபிதான கோசம் (தமிழ் அகராதி) சகல சிறப்புக்களையும் பெற்றது. இது சம்பந்தமான அவரது அகராதி பற்றி எவரும் எழுதுவது கிடையாது. அவருடைய சேவைகள் மறுபதிப்புக்கள் வெளியிடப்படாமையுமே இதற்கான முக்கிய காரணம்.

முத்துத்தம்பிப்பிள்ளைக்கு இலங்கை வரலாறு சம்பந்தமாக இருந்த மாபெரும் அறிவு எம்மைப் பிரமிக்க வைக்கின்றது. இலங்கைத் தமிழர் வரலாற்றில் கடுமையான வரலாற்று இருட்டடிப்புச் செய்யப்படும். இக்காலத்தில் அவர் எழுதிய இரண்டு நூல்கள் மறுபதிப்புச் செய்யப்படின் எமது சமுதாயத்துக்கு மாபெரும் தொண்டு செய்தவர்கள் ஆவோம்.

அந்த இரண்டு நூல்கள்
01.Epitoma of ceylon History (ஆங்கிலத்தில்)
02. History of Jaffna (ஆங்கிலத்தில்)

பம்பாயின் சசூன்கல்லூரி (Sasoon College) ல் துணை அதிபராக இருந்த பியூல் ( Buell) அவர்கள் அக்காலத்தில் முத்துத்தம்பிப்பிள்ளை எழுதிய யாழ்ப்பாண வரலாற்றினை மிகவும் பாராட்டி எழுதினார். எதிர் காலத்தில் யாழ்ப்பாணத்தின் வரலாறு சிதைக்கப்படின் இந்நூல் தக்க பதிலடி அதற்குக் கொடுக்கும் என அவர் கருதினார்.



இந்நூலில் குமாரதேவேந்திர முதலியார் பற்றியும் நுளம்பராய முதலியார் பற்றியும் முத்துத்தம்பிப்பிள்ளை சில தகவல்களை எமக்குக் தந்து இருக்கின்றார். குமாரதேவேந்திர முதலியாரே வண்ணை சிவன் கோவிலுக்கு அதிக நிலங்களைத் தானமாகக் கொடுத்தவர். மற்றவர் தென்னிந்தியாவில் இருந்து பிராமணர்களை இலங்கைக்கு வரவழைத்து வலிகாமம் மேற்கில் குடியேற்றியவர். இந்த இரண்டு விடயங்களும் தனக்கு என்றுமே தெரிந்திராத ஒன்று எனப் பியூல் ஆச்சரியம் தெரிவித்து எழுதினார். இந்நூல் இன்றைய எமது காலகட்டத்தில் ஒவ்வொரு தமிழனிடமும் இருக்க வேண்டிய நூலாகும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரிக்கும், தமிழ்ப் பெருங்கடல் சதா வதானி கதிரவேற்பிள்ளைக்கும் சில விசயங்களில் முன்னோடியாகக் கருதப்படக் கூடியவர் முத்துத்தம்பிப்பிள்ளையே! அவரால் வெளியிடப்பட்ட தமிழ் அகராதியும், ஆங்கில தமிழ் அகராதியும் சதாவதானியின் காலத் திற்கு முற்பட்டது.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி மகாபாரதத்தை ஆங்கிலத்தில் எழுதி அரங்கேற்றுவதற்கு முன்பே முத்துத்தம்பிப்பிள்ளை அதனை அரங்கேற்றி விட்டார். இவ்வகையில் முழு ' இலங்கைத்தமிழருமே பெருமைப்பட வேண்டிய விடயமாகும். அவர் எழுதிய மகாபாரதம் பெங்க ளூரில் உள்ள தூய இருதயக்கல்லூரிகளில் லண்டன் பரீட்சைகளுக்குப் பாடப் புத்தகமாக வழங்கப்பட்டுப் பெருமையை நிலைநாட்டியது.

தமிழ் இலக்கணத்தை இலகுபடுத்தும் முகமாக அவரால் வெளியிடப்பட்ட "Nanool made easy என்ற நூலும் ஆங்கிலத்தில் தனக்கு இருந்த புலமையைப் பயன்படுத்தி Civilians Tamil grammer " என்ற நூலையும் எழுதினார். அத்துடன் தமிழ் இலக்கியங்களை மேற்கு நாட்டவர்கள் விளங்கிக்கொள்ளும் முகமாக History of Tamil Literature என்ற நூலும் அவரால் வெளியிடப்பட்டது.

எழுத்தாளர்களும் அச்சக முதலாளிகளும் இக்காலம் கூட்டுச் சேர்ந்தும் செய்ய முடியாதவற்றை இத்தமிழ் மகன் தனி ஒருவனாக நின்று சாதித்துள்ளார் இதனால்தானோ என்னவோ அகில இலங்கை ரீதியில் நடந்த பொருட்காட்சியில் அவரது அச்சகம் வெள்ளித்தட்டினைப் பரிசாகப் பெற்றுக்கொண்டது.

இலக்கியத்தில் மாத்திரம் அன்றி மருத்துவத்துறையிலும் அவர் சேவை அளப்பரியது. "The Tamil Medical News" என்ற சஞ்சிகை அவரால் பல காலம் இந்தியாவில் இருந்து வெளியிடப்பட்டது. அவரின் அளவற்ற தமிழ்ப் புலமையின் காரணமாக மதுரைத் தமிழ்ச் சங்கம் தனது பரிசோதகர்களில் ஒருவராக அவரை வைத்து கௌரவித்தது.

சமீபகாலமாக ஈழத்தமிழ் அறிஞர்கள் சம்பந்தமாக வெளியிடப்பட்ட நூல்களிலும் பல்கலைக்கழக ஆய்வுகளிலும் முத்துத்தம்பிப்பிள்ளை பற்றி எவரும் எதுவும் குறிப்பிடாதது எனக்கு வேதனையையும் அதிர்ச்சியையும் தந்தது.

காலத்தால் அழியாத இத்தமிழ் அறிஞரின் ஆக்கங்களை மீண்டும் நூலுருவில் கொண்டு வர வெளியீட்டாளர்கள் முன்வரவேண்டும்.





# 12 இலங்கை வரலாற்றில் அர்த்தம் இல்லாத வரலாற்றுத் திறனாய்வுகள்!

இலங்கை வரலாற்றில் அணுகுமுறைகளைத் தீர்மானிக்கும் அளவு கோல் இன்றுவரை இல்லை. இதனால்தான் இனம் சம்பந்தமான வரலாறுகளில் தேவையற்ற இடைச் செருகல்களும், அணுகுமுறைக் கோட்பாடுகளும் புகுந்து உள்ளன. வரலாற்றில் இரு இனங்கள் மோத வேண்டி ஏற்பட்டமைக்கு இவ்வாறான பிழையான வரலாற்று அணுகு முறைகளே காரணம்.

## சிங்களமும், பௌத்தமும் ஒன்று அல்ல!

சிங்கள மொழியும், பௌத்தமும் ஒன்று என்ற அணுகுமுறை இலங்கை சுதந்திரம் அடைந்த பின்பு கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது. ஆனால் சிங்களமும். பௌத்தமும் ஒன்று அல்ல! இலங்கையிலும் சரி இந்தியாவிலும் சரி பௌத்தத்தைப் பரப்புவதில் முன்னணியில் நின்றவர்கள் தமிழ்த் துறவிகளே! தமிழில் எழுந்த மணிமேகலை ஒரு புத்த காவியம் எனவே தமிழில் பௌத்த சமயம் பரவி இருந்தது என்பது மறுக்க முடியாத உண்மையாம்!

இலங்கையின் தமிழ்ப் பிரதேசங்களில் அகழ்வாராய்ச்சியின் போது புத்தர் சிலைகள் கண்டுபிடிக்கப்படும் போது அங்கு சிங்கள மக்கள்தான் குடியிருந்தார்கள் என நிறுவ முற்படுவதும் வரலாற்று அணுகுமுறையில் ஏற்பட்ட தவறே! இலங்கை, இரத்தினதுவீபம், ஈழம் என்ற பெயர்கள் தமிழ்ப் பெயர்களாகும். லங்கா என்பது தமிழ்ச் சொல்லின் திரிபாகும். சிங்கள மொழியில் இலங்கையை அழைப்பதற்கு ஒரு நல்ல பெயர் இல்லாது இருந்தமை சிங்கள மொழியின் அன்றைய வரட்சியையே காட்டி நிற்கின்றது.

## தமிழும் பௌத்தமும் சில தகவல்கள்!

தமிழில் பௌத்தம் பற்றி ஆராயப் புகுந்த தமிழறிஞர் உ. வே. சாமிநாதஐயர் அங்கு கூறப்படுவது 'தேரவாத' புத்தம் என்கின்றார். திக்நாகர் என்ற தமிழ்ப் புத்தத் துறவி எழுதிய தர்க்கவியலை அடிப்படையாகக் கொண்டே மணிமேகலைக் காவியம் சுழல்வதாக பண்டித குப்புஸ்வாமி என்ற ஆராய்ச்சி அறிஞர் அபிப்பிராயப்படுகின்றார்.

பௌத்த நூலாசிரியரான புத்த தத்தரின் (கி.பி 5ம் நூற்றாண்டு) நூலில் இருந்து அச்சுதவிக்கந்தன் என்ற களப்பிர மன்னன் ஒருவன் சோழ நாட்டை ஆண்டு வந்ததாக வரலாற்று ஆய்வாளரான திருநீலகண்ட சாத்திரி தெரிவிக்கின்றார். இந்த அச்சத விக்கந்தன் என்ற மன்னன் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்து அரசாட்சி செய்ததாக அதே புத்ததத்தரின் நூலில் இருந்து அறிய வருகின்றது.

## தர்மகீர்த்தி என்றொரு தமிழ் பௌத்தத் துறவி

சோழ நாட்டில் திருமலை என்ற கிராமத்தில் பிறந்த இவர் திக்நாகர் என்ற பௌத்த துறவியின் வாரிசாகும். இவர் மிகவும் திறமை பொருந்திய தர்க்கவியல் சிந்தனையாளர். அண்மைக்காலம் வரை தர்மகீர்த்தி அறியப்படாமல் தான் இருந்தார். ஆயினும் அவர் எழுதிய "பிராமண வார்த்திகம்" என்ற சமஸ்கிருத நூல் தீபெத்தில் கண்டு பிடிக்கப்பட்டது. இதனைக் கண்டுபிடித்த ராகுல் சாங்கிறாத்தாயன் தமிழ் பௌத்தத் துறவி ஒருவனின் சேவையை உலகறிய வைத்துள்ளார். (ஆதாரம் சோ. த. கந்தசாமி ( Date of chillapaddikaram V. Selvanayakam University of Ceylon Review Vol iii 1948)

## இலங்கையில் புத்தமதம்

இலங்கையில் கி.பி ஐந்தாம் ஆறாம் நூற்றாண்டுகளில் புத்த சங்கம் ஆரம்பிக்கப்பட்ட ஆண்டுகளில் தமிழர்கள் பலர் புத்த துறவிகள் தங்குவதற்கு நிலங்களையும் குகைகளையும் வழங்கினர். புத்த சமணத்துக்குத் தாவிய தமிழர்கள் பெருமகர் என அழைக்கப்பட்டனர். டாக்டர் பரணவிதான அவர்கள் பெருமகர் என்பதற்குப் புதியதும் சிரிப்புக்கிடமான அர்த்தம் ஒன்றினை வழங்கியுள்ளார். சிங்கள மக்களிடம்



சட்டத்திற்கு விரோதமான முறையில் பிடுங்கி எடுத்தவர்களே பெருமகர்.என்பது பரணவிதானவின் வாதமாகும். இது மிகப்பெரிய தவறாகும். இலங்கையில் இன முரண்பாடுகள் 10ம் நூற்றாண்டுக்குப் பின்புதான் சிறிதளவாக உற்பத்தியாகின்றன. துட்டகைமுனுவின் படைவீரர்களிடையே பல தமிழ்ப் போர்வீரர்கள் இருந்ததாக வரலாறு குறிப்பிடுகின்றது. இந்நிலையில் பரணவிதானவின் இந்தக் கூற்று எவ்விதமான ஆதாரமும் இல்லாத நகைப்புக்கு இடமான கூற்றாகும். புத்த சமயத்துக்குத் தழுவிய பெருமகர் இலங்கையின் இறைமைக்கு நல்ல பங்களிப்புச் செய்தனர் என்பது வரலாறு காட்டும் உண்மை.

மேற்படி நூல் வெளியிடப்பட்டதன் பின்பு (1970களின் பின்பு) பிராமி எழுத்துக்களுடன் கூடிய கல்வெட்டு ஒன்று தல்காகொட விகாரையில் கண்டுபிடிக்கப்பட்டது. இந்த விகாரை மாத்தளை மாவட்டத்தில் அமைந்துள்ளது. பிராமி மொழியில் எழுதப்பட்ட இந்தக் கல்வெட்டினைப் புதை பொருள் ஆராய்ச்சித் திணைக்களத்தைச் சேர்ந்த டாக்டர் சடமங்கல கருணாரத்தினா பின்வருமாறு மொழிபெயர்த்தார். "இந்த இரண்டு குகைகளும் தமிழ் பௌத்தர்களின் நன்கொடை. ஆறு கட்டளைகளின் கீழ் இவை நன்கொடையாக வழங்கப்பட்டிருக்கின்றன. மேற்படி கல்வெட்டு வடக்கிற்கும் கிழக்கிற்கும் வெளியிலும் கூடத் தமிழ் மக்கள் பௌத்தமதத்தில் இருந்தார்கள் என்பதற்கான ஆதாரங்கள். எனவே புத்தர் சிங்கள மொழிக்கோ, சிங்கள வரலாற்றுக்கோ குறியீடான ஆன்மீகத் தலைவர் அல்ல.

நாகார்ச்சுன கொண்டவில் கண்டுபிடிக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று இரண்டாம் நூற்றாண்டில் கூட இலங்கையிலும் இந்தியாவிலும் தமிழ் பௌத்தர்கள் இருந்ததாகவும் இவர்கள் "Damila" என அழைக்கப்பட்டதாகவும் கூறுகின்றது. இந்தப் புத்தர்கள் தேரவாத பிரிவினர் என நம்பப்படுகின்றது. 20ம் நூற்றாண்டில் 1940ம் ஆண்டுக்குப் பிற்பட்டுப் பல சிங்கள எழுத்தாளர்கள் ஆதிகாலத்தில் இருந்து சிங்கள மக்கள் யாவரும் பௌத்த சமயிகளே என்றும் எல்லாத் தமிழ் மக்களும் இந்துக்களே என்றும் எழுதி வருகின்றார்கள். இந்தப் பிழையான அணுகு முறையில் இருந்து இலங்கை வரலாறு மீட்கப்படாவிடில் இலங்கையின் இனிவரும் வரலாற்று உண்மைகள் யாவும் மறைக்கப்பட்டு விடும்!

பௌத்த சமயத்தின் மத போதனைகள் இந்தியாவில் இருந்தே தொடங்கப்பட்டன. அவற்றில் காஞ்சிபுரமும் ஒன்று. அங்கிருந்து ஆரம்பிக்

கப்பட்ட புத்த போதனைகள் பாளி மொழியிலேயே ஆரம்பிக்கப்பட்டன. பாளி மொழியில் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட தமிழ் துறவிகள் மதுரை ஊடாக இலங்கை வந்தனா். இவா்கள் தேரவாதப் பிரிவினைச் சோ்ந்தவா்கள். இவ்வாறு புத்த மதத்தைப் பரப்புவதற்காக அனுப்பப்பட்ட துறவிகளில் புத்தமிற்றா, புத்த கோசா, புத்ததாற்றா, போதி தா்மா, தா்மபாலா எனப் பெயரிடப்பட்ட தமிழா்கள் எனவும் வரலாறு கூறுகின்றது. தமிழ் மக்களும் சிங்கள மக்களும் மதரீதியான கலப்புறவு ஒன்றை ஆதிகாலத்தில் கொண்டிருந்தபடியால்தான் தமிழ் - சிங்கள புதுவருடம் ஒரேநாளில் அமைந்துள்ளது. என்பதை வரலாற்றில் இனவாதம் கொண்டுவரும் சிங்கள வரலாற்று எழுத்தாளா்கள் புரிந்து கொள்ள வேண்டிய சங்கதிகளாகும்.

மிகவும் துரதிஸ்டவசமாக மணிமேகலை போன்ற தமிழ் பௌத்த காவியங்களைத் தவிர தமிழ் மக்கள் பௌத்தம் பற்றி எழுதி வைத்த பல நன்னூல்கள் அழிந்து விட்டன. வீரசோழியம் போன்ற பழந்தமிழ் நூல்களிலும் பௌத்தம் பற்றிய பல கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன.

இலங்கையின் ஆதிக்குடிகளாக நாகா்கள், இயக்கா்கள் குறிப்பிடப் படுகின்றனா். நாகதீபத்தில் உள்ள நாக மன்னனைச் சந்திக்கப் புத்தா் சென்றுள்ளதாக வரலாறு சொல்கின்றது. அந்த நாகன் சிங்களம் பேசியதால் புத்தா் அங்கு சென்றதாக எந்த வரலாறும் குறிப்பிடப்படவில்லை. இலங்கையில் பௌத்தம் வருவதற்கு முன்பு நாகரீகம் எதுவும் இலங்கையில் இருக்கவில்லை. என்பது சூலவம்சம், மகாவம்சம், தீபவம்சம் என்பன காட்டும் விதண்டாவாதங்கள் இந்த மாயையில் இருந்து புத்தரைப் பிரித்து எடுக்க வேண்டும்.

## பா்மா காட்டும் உண்மைகள்

பா்மாவில் அமைக்கப்பட்டுள்ள பல புத்தா் சிலைகள் பிள்ளையாரை வணங்குவதற்காக இருக்கின்றன. இதற்கு ஒரு அடிப்படை வாதம் இருக்கின்றது. புத்தா் பிறந்தவுடன் புத்தமதம் பிறக்கவில்லை! அது அவருக்கு முன்பே ஆரம்பிக்கப்பட்டு அவரின் வாழ்வுடன் ஒரு குறியீட்டைப் பெற்றுக் கொண்டது அதனால் அவா் பிறக்கும்போது அவா் ஒரு இந்துவாகத்தான் இருந்தாா். சகல இந்து மதத் தெய்வங்களும் அவரால் வழிபடப்பட்டன. பிராமணத்தை அவா் எதிா்க்கவில்லை. பிராமணத்தில் இருந்து சில மூட நம்பிக்கைகள் அகற்றப்பட வேண்டும் என்பதுதான் அவரின் பரிவுரையாக இருந்தது.



வாதம் என்ற சொற்றொடா் கூட இங்கு பாவிக்கப்படுவதற்கு தகுதி அற்ற ஒன்று. புத்தா் பின்வருமாறு திருவாய் மலா்ந்துள்ளாா்.

“பிட்சுக்களே இந்த உலகத்தில் எல்லாம் அழியக் கூடியவை என்பதைத் தவிர நான் இப்போது எதனையும் சொல்வதற்கு இல்லை. எனவே விமோசனம் ( நிா்வாணம்) பெறுவதற்குப் பாடுபட்டு வாருங்கள். ஒருவன் பிறந்தவுடன் பிராமணன் ஆவதில்லை. சண்டாளனும் ஆவது இல்லை. ஒருவனின் செயல் காாியங்கள் தான் அவனைப் பிராமணன் ஆக்குகின்றது” (சுத்தநிபாதம் 641) இந்தச் சீா்திருத்தம் பிறப்பினால் சாதிப்பாகுபாடு காட்டப்படாது என்பதையும் திராவிட இயக்கம் சொன்ன “ஒன்றே குலம் ஒருவனே தேவன்” என்ற கோட்பாட்டையும் தானே பிரதிபலிக்கின்றது. புத்தா் ஒரு இந்துவாக இருந்திருக்காவிட்டால் பிராமணியச் சீா்திருத்தம் பற்றி கருத்துச் சொல்லியிருக்க முடியாது இதனை விட புத்தா் தனது வாழ்நாளில் மகாயான பௌத்தராகவோ, தேரவாதப்பிரிவினராகவோ தன்னை அடையாளம் காட்டவில்லை! அவா் தன்னை அராத் மதவாதியாகவே இனம் காட்டினாா். இதனை இன்று இனவாதக் கண்ணோட்டத்துடன் இணைத்து உள்ள வரலாற்று ஆய்வாளா்கள் கவனத்துக்கு எடுப்பதில்லை!

## அா்த்த புஷ்டியான ஆறுமுகநாவலா்

இலங்கை வரலாற்றில் மிகப் பெரும் தாக்கத்தை ஆறுமுக நாவலா் ஏற்படுத்தாவிட்டாலும் சமயத்துறையில் அவா் பெரும் தாக்கம் ஒன்றினைச் செய்துள்ளாா். பிற சமயங்கள் இந்து மதத்தைத் தாக்கி மதம் மாற்றுவதை அவா் விரும்பவில்லையே தவிர மதச் சமரசம் அவரிடம் இருந்தது. அதனால்தான் பைபிளை அவா் மொழிபெயா்ப்பதற்கு உதவி செய்தாா். “சைவமும் தமிழும் ஒன்றல்ல இரண்டு” என ஆறமுகநாவலா் கூறியுள்ளாா். இலங்கையின் வரலாற்று ஆய்வாளா்க்கு இல்லாத தனித்துவம் ஆறுமுக நாவலாின் இந்தக் கூற்றுக்கு உண்டு. இந்து மதத்தின் உட்பிரிவுகளில் ஒன்றான சைவம் உலகின் பல பாகங்களிலும் இருந்துள்ளது. இலங் கைக்குப் புத்தா் விஜயம் செய்து காலப்பகுதிக்கு அமைவாக ஜாவாவில் சஞ்சயன் தோற்றுவித்த மாதரம் (Mataram) என்ற அரசு சைவ சமயத்தைத் தழுவியது. ஜாவாவில் உள்ள பிராமணன் என்ற இடத்தில் சிவன், விஸ்ணு, பிரமன் முதலிய தெய்வங்களுக்கு அமைந்த கோயில்கள் இன்றும் உள்ளன. ஆயினும் கூட ஆறுமுகநாவலா் பழம்பெருமை மிகு தமிழையும், சைவத்தையும் ஒன்று என முடிச்சுப் போடவில்லை. இரண்டு

எனவே கூறியுள்ளார். இலங்கையின் இன்றைய பிரதான சமயங்களான இஸ்லாம், கிறிஸ்தவம் என்பனவற்றையும் பக்திக்கு உரிய மொழியான தமிழ் வளர்த்து விட்டுள்ளது.

சைவத்தின் ஆயிரக்கணக்கான திருப்பாடல்களை நாயன்மார்கள் பாடியுள்ளார்கள. அதேசமயத்தில் இந்து மதத்தின் ஒரு உட்பிரிவான வைணவத்தை ஆள்வார்கள் பாடியுள்ளார்கள். எனவே சைவத்தைத்தான் தமிழ் வளர்த்து விட்டது. என்ற பதம் நகைப்புக்கிடமானது. அவ்வாறான கருத்துக்களில் இருந்து ஆறுமுக நாவலர் நீங்கி இருப்பது மாத்திரம் அன்றி "சிங்களமும் பௌத்தமும்" என்ற அநாகரிக தர்மபாலாவின் கோட்பாட்டில் இருந்தும் நாவலர் விலகி நிற்கிறார். இந்த அணுகுமுறையை இலங்கை சுதந்திரம் அடைந்த பின்பு சிங்கள ஆய்வாளர்கள் நடைமுறைப்படுத்தி இருந்தால் இலங்கையின் இனக் கலவரங்கள் இல்லாது ஒழிந்திருக்கும்.

தமிழ்க் கவிதை வரலாற்றில் தேராதவன் சிறுவெண்தேரையார் போன்ற கவிஞர்கள் புத்த சமயத்தைச் சேர்ந்தவர்கள் என்றும் அந்த மதத்தின் மறுமலர்ச்சிக்காகக் கவிதை பாடினார்கள் என்றும் சொல்லப்படு கின்றது. இவற்றை விட நற்றிணையில் (366) குறுந்தொகையில் 189, 343, 369 ஆகிய பாடல்களிலும் பௌத்தம் பற்றிய தகவல்கள் இருப்பதா கத் தனது வரலாற்று நூலான (Cultural Pluralisam in Sri Lanka) என்ற நூலில் பிதா கனகரத்தினம் அவர்கள் கூறியுள்ளார். இந்த நூல் தொல் லியல் ஆய்வாளரான பரணவிதானவின் வாதங்களுக்கு பதில் அளிப்ப தற்காக எழுதப்பட்ட நூலாகும்.

இலங்கை வரலாற்றை உய்த்து உணர்ந்தால் அதன் ஆய்வுகள் எந்த முறையிலும் எழுதப்படலாம் எனப் பலரும் நினைக்கிறார்கள். இது அடிப்படைத் தகைமையை அழிக்கும் அர்த்தம் அற்ற செயலாகும்.



